# உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரைகள் அடைவு




முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரைகள் - அடைவு

முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

## Bibliographical Data


| | | |
|---|---|---|
| *Title* | : | Ulakat Tamil Manattuk Katturaikal - Ataivu |
| *Author* | : | ***Dr T. MAHALAKSHMI***<br>RESEARCH Assistant<br>International Institute of<br>Tamil studies, Madras. |
| *Publisher copy right* | : | International Institute<br>of Tamil Studies,<br>C.P.T. Campus,<br>Taramani, Madras-600 113. |
| *Publication No* | : | 199 |
| *Date of Publication* | : | December 1994 |
| *Edition* | : | First |
| *Paper used* | : | 16 Kg White |
| *Size* | : | 21x14 Cms |
| *Printing types* | : | 10 Point |
| *Laser Print* | : | **Vignesh Laser Printers**<br>4&5 Thanappa St, Ms-5. |
| *No of Copies* | : | 1200 |
| *No of Pages* | : | 8+206 = 214 |
| *Price* | : | Rs.35/- |
| *Printers* | : | **SRI YESES PRINT HOUSE**<br>4&5 Thanappa Chetty St, Ms-5.<br>✆ : 833231, 833259 |

டாக்டர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை 113.

# அணிந்துரை

"செந்தமிழே!உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித் தேனே!
நைந்தா யெனில் நைந்து போகுமென் வாழ்வு
நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே"

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடினார். செந்தமிழ் மொழியின் சிறப்பினையும் இலக்கிய வளத்தினையும் உலகுக்கு எடுத்து இயம்பும் நோக்கத்தில் முதல் உலகத் தமிழ்மாநாடு 1966 ஏப்ரல் திங்கள் 16ஆம் நாள் மலேசியா கோலாலம்பூரில் நடைபெற்றது. தனிநாயகம் அடிகளின் பெருமுயற்சியால் நடைபெற்ற இம்மாநாட்டில் பல்துறை அறிஞர்கள் கட்டுரை வழங்கினர். அதற்கடுத்து, இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு 1968 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 3-ஆம் நாள் சென்னையிலும், மூன்றாம் உலகத் தமிழ் மாநாடு 1970-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 15-ஆம் நாள் பாரீசிலும், நான்காம் உலகத் தமிழ்மாநாடு 1974-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 3-ஆம் நாள் யாழ்ப்பாணத்திலும், ஐந்தாம் உலகத்தமிழ் மாநா்டு 1981-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 4-ஆம் நாள் மதுரையிலும், ஆறாம் உலகத் தமிழ் மாநாடு 1987-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் கோலாலம்பூரிலும், ஏழாம் உலகத் தமிழ் மாநாடு 1989-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 5-ஆம் நாள் மொரீசியஸின் தலைநகரான போர்ட்லூயிஸிலும் சிறப்புற நடைபெற்றன.

இதுகாறும் உலகத் தமிழ் மாநாட்டில் படிக்கப்பெற்ற ஆய்வரங்கக் கட்டுரைகள் மற்றும் மலர்க் கட்டுரைகளை இந்நிறுவனம் நூலடைவு செய்ய எண்ணியது.

முதல் ஐந்து மாநாட்டில் படிக்கப்பெற்ற கட்டுரைகளே நூலாக்கம் பெற்றுள்ளன. ஆறாம், ஏழாம் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள் நூல் வடிவம் பெறவில்லை. மாநாடுகளையொட்டி மலர்களும் வெளிவந்துள்ளன. இவ்வனைத்துக் கருத்தரங்க- மலர்க் கட்டுரைகள் நூலடைவு செய்யப்பட்டுள்ளன. இந்நூல் காலமறிந்தும், ஆய்வாளரின் தேவையுணர்ந்தும் வெளியிடப் படுகிறது.

இப்பணியினைச் சிறப்புறச் செய்து முடித்தவர் இந்நிறுவனத்தின் ஆராய்ச்சி உதவியாளர் முனைவர் திருமதி தி. மகாலட்சுமி அவர்கள் ஆவார். தஞ்சையில் நடைபெறவிருக்கும் எட்டாம் உலகத்தமிழ் மாநாட்டை முன்னிட்டு உலகத்தமிழ் மாநாட்டுக் கட்டுரைகள் - அடைவு என்ற இந்நூல் வெளிவருவது குறித்துப் பெருமையடைகிறேன்.

இந்நிறுவனத்தின் அனைத்து ஆக்கப் பணிகளுக்கும் ஊக்கம் தருகின்ற இந்நிறுவனத்தின் தலைவர் மாண்புமிகு கல்வியமைச்சர் பேராசிரியர் க. பொன்னுசாமி அவர்களுக்கு என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

# முன்னுரை

தேமதுரத் தமிழோசையை உலகமெலாம் பரவும் வகை செய்வதற்கென்று கூட்டப்பெறுகின்ற 'உலகத் தமிழ் மாநாடு' அன்னைத் தமிழுக்கு அழகு சேர்க்கும் விழாவாக அமைகின்றது. அறிஞர் பெருமக்கள் கட்டிக் காத்த தமிழும், தமிழரும் மேன்மையடைய இவ்விழா உறுதுணை புரிகிறது. தமிழ்நாட்டிலே மட்டுமன்றி தமிழ் பேசும் உலகின் எல்லாப் பகுதி மக்களும் எழுச்சியோடு எண்ணிப் பெருமிதம் கொள்கிற இனிய நிகழ்ச்சியாக இம்மாநாடு இருந்து வருகிறது.

சிந்தனைச் செலவில் பெறுவது ஆய்வு. ஆய்வில் பிறப்பது வளர்ச்சி. இத்தகைய ஆய்விற்கும் அதன் மூலம் பெறப்படும் வளர்ச்சிகளுக்கும் அடித்தளம் அமைத்துத் தருவன இக்கருத்தரங்க மாநாடுகள். இம்மேலான சிந்தனையின் விளைவால் தொடங்கப் பெற்றதே உலகத் தமிழ் மாநாடுமாகும். தமிழறிஞர் பலரின் உயர்ந்த சிந்தனை உரத்த சிந்தனைகளாக வெளியுலகு முழுவதும் தெரியும் வண்ணம் இவை மலர்ந்தன. இன்று வரையிலும் நடைபெற்ற ஏழு உலகத் தமிழ்மாநாட்டுக் கருத்தரங்குகளிலும் இவை வெளிப்பட்டுள்ளன. எனினும் இச்சிந்தனைகள் அனைத்தும், அனைத்துத் தமிழறிஞர், தமிழ் ஆர்வலர், தமிழ் ஆய்வாளர் போன்றோரிடம் சென்று சேர்ந்து விட்டன எனல் இயலாது. எனவே இம்மாநாடு குறித்த ஒருமித்த ஒரு சிந்தனையை வெளிக் கொணர வேண்டும் என்ற நிறுவன இயக்குநரின் ஆர்வங்காரணமாக எழுந்ததே இச்சிறிய வெளியீடு.

இவ்வெளியீடு அடுத்து நடக்கும் மாநாடுகளில் கட்டுரை படிப்போர் வந்த தலைப்புகளை அறிந்து கொண்டு தங்கள் கட்டுரைகளை அமைக்கவும் ஏதுவாக இருக்கும்.

இந்நூலின் முதல் பகுதி, முதல் ஏழு மாநாடுகள் எங்ஙனம் நடந்தேறின என்பதன் சுருக்கமாகவும் அடுத்தபகுதி, மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள், மாநாட்டு மலரில் வெளிவந்த கட்டுரைகள், கவிதைகள் இவற்றின் தொகுப்பாகவும் அமைகின்றன.

முதல் எண் மாநாட்டையும், இரண்டாம் எண் தொகுதியையும் (Volume), மூன்றாம் எண் பக்கத்தையும், இறுதி எண் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதிகள் வெளிவந்த ஆண்டையும் குறிக்கின்றன. பக்க எண்கள் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரை வெளியீடுகளில் எங்ஙனம் தரப்பட்டுள்ளதோ அம்முறையிலேயே தரப்பட்டுள்ளன. மலர்க்கட்டுரைகளில் பக்க எண்ணிக்கை அடைப்புக் குறிக்குள் இருப்பின் அது அக்கட்டுரையின் மொத்தப் பக்கங்களைக் குறிப்பதாகும்.

அயராத உழைப்பு; தளராத முயற்சி; காட்சிக்கு எளிமை; கடுஞ்சொல் இன்மை; கருத்தில் தூய்மை; கடமையில் செம்மை; உழைப்பில் உண்மை; பண்பில் பசுமை; பகுத்தறிவில் மென்மை; ஆகியவற்றிற்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கும் இந்நிறுவன இயக்குநர் டாக்டர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கள் ஊக்கமும், ஆக்கமும் தந்துதவி. நூல் வெளிவரச் செய்தமைக்கு மனமார்ந்த நன்றி.

இந்நூல் எழுத உறுதுணையாக இருந்த முனைவர் கு. பகவதி அவர்கட்கும், நூல்களைத் தந்துதவிய நூலகர் திருமதி இரா. பார்வதி அவர்கட்கும், இந்நூல் எழுதும்போது உதவிய ஆய்வாளர் அ.பழனிச்சாமி, சுவடி மாணவர்கள் ஆ. சுப்பையா, அ. பிச்சுமணி, ரெ. இராமையா, த. செகதீசன் ஆகியோர்க்கும் என் நன்றி உரித்து.

— தி. மகாலட்சுமி.

# பொருளடக்கம்

# இயல்1.

## உலகத்தமிழ்மாநாடு

### 1.1. தமிழ்

தமிழ் என்றாலே இனிமை என்று பொருள்படும்,' தமிழுக்கும் அமுதென்று பேர்' என்று பாவேந்தர் கூறியது போல, அமுது என்றும் பொருள்படும்.

இத்தமிழ்மொழி திராவிட மொழிக்குடும்பத்தின் தாயாகும். இதனை மொழியியல் அறிஞர் நிறுவியுள்ளனர். மிகப் பழங்காலத்திலேயே இலக்கண வரம்புடையது தமிழ். காட்டாக கிறித்து பிறப்பதற்கு முன் எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியத்தினைக் கூறலாம்.

ஒரு மனித இனம் சமுதாயமாக வாழத் தொடங்கி நாகரீகம் முகிழ்த்த பின்னரே இலக்கியங்கள் தோன்றும். பல்வேறு வகையான இலக்கியங்கள் கண்ட பின்னரே இலக்கணங்கள் தோன்றும் என்றால், தொல்காப்பியருக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ்மொழி இலக்கியங்களுடன் திகழ்ந்திருக்க வேண்டும்.

இப்படியே தமிழின் தொன்மையை ஆய்ந்தோமானால், என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாகத் தமிழன்னை இருப்பதனை உணரலாம்.

இத்துணைப் பழைமைச் சிறப்பிற்கும், அதே நேரத்தில் காலத்திற்கேற்ற புதுமைப் புனைவிற்கும் இடம் தரும் இயல்பினதாகத் தமிழ் திகழ்கிறது.

அறிவியல் வளர்ச்சிக்குத் தக்கவாறு தானும் வளர்ந்து இன்றைய கணிப்பொறி யுகத்திற்கும் ஈடுகொடுக்கும் தன்மையதாகத் தமிழ் திகழ்கிறது.

உயர் தனிச் செம்மொழி என்று குறிப்பிடப்படுகின்ற கிரேக்கம். இலத்தீன், ஈப்ரூ, வடமொழி, சீனம். தமிழ் ஆகியவற்றுள் மற்ற மொழிகள் எல்லாம் உலகவழக்கிழந்து நிற்க தமிழும் சீனமும் மட்டுமே இலக்கிய வழக்கும் உலக வழக்கும் உடைய தன்மையனவாகத் திகழ்கின்றன.

"ஆரியம் போல் உலக வழக்கழியா உன்
சீரிளமைத் திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே"

என்று மனோன்மணீயத்தில் சுந்தரம்பிள்ளை கூறுகிறார்.

இவ்வாறு பழமைக்குப் பழமையும், இளமைக்கு இளமையும், வளமைக்கு வளமையும் புதுமைக்குப் புதுமையும் உடையது தமிழ்மொழி.

நம்முடைய நாட்டிற்கு வெளியேயும் தமிழ் பேசப்படுவதால் தமிழ்மொழி ஒரு சர்வதேச மொழியாகத் திகழ்கின்றது.

## 1.2. தமிழர்

இத்தகைய சீரிளமைத் திறமுடைய தமிழ் பேசிய மக்கள் தமிழர் எனப்படுகின்றார். தமிழைப் போலவே இக்குடியினரும் இனிமையும் பழமையும் உடையவர்கள். இவர்களது தோற்றம் லெமூரியாக் கண்டம் என்றழைக்கப்படும் குமரிக் கண்டமாகும். மனித இனமே இங்குதான் தோன்றியதென்று ஒருசார் அறிஞர்களின் கூற்றினைக் கொண்டு பார்த்தால், உலகின் முதல் மனித இனிமாகத் திகழ்வது தமிழினமே.

குமரிக் கண்டத்தில் தோன்றி இந்தியா முழுவதும் பரவி நாகரிகத்தோடு இவர்கள் வாழ்ந்தார்கள். சிந்து சமவெளி நாகரிகம் இவர்களுடையதே. இங்குக் காணப்படும் சித்திர எழுத்துகள் தமிழ் எழுத்துகளே.

தமிழர் பண்பாடு உலகத்தில் எல்லா மனிதர்களையும் சகோதரர்களாகவும், தோழர்களாகவும் ஏற்றுக் கொள்ளும் இயல்புடையது. தன்னிடம் வருபவர்களை வாழத்தி வரவேற்கும்;

எந்த மொழியையும் உரிய முறையில் மதிக்கும்; அறிவுச் செல்வம் உலகின் எந்தக் கோடியில் இருந்தாலும் தேடிச் சென்று எடுத்து வரும். ஆனால் தமிழர் தமக்கென்று உள்ளதை ஒருக்காலும் இழக்கச் சம்மதிக்க மாட்டார்கள்.

இவ்வாறு இந்தியா முழுமையும் பரந்து வாழ்ந்து வந்த காலத்தில் கைபர், போலன் கணவாய்கள் வழியாக இந்தியா வந்த ஆரியர்களால் தாக்கப்பட்டனர். விந்திய சாத்பூரா மலைகளுக்குத் தெற்கே துரத்தப்பட்டனர். தென்னிந்தியாவில் மட்டும் வாழ்ந்த இவர்கள் காலப்போக்கிலான மொழிவளர்ச்சிக் கூறுகளால் பல்வேறு மொழியினராகப் பிரிந்தனர்.

உண்மையில் தென்னிந்தியாவில் வாழ்கின்ற திருந்திய மற்றும் திருந்தா திராவிட மொழிகளைப் பேசுகின்ற திராவிடர்கள் அனைவரும் தமிழர்களே.

## 1.3. தமிழ்நாடு

தமிழ்மொழி வழங்குகின்ற நாடு தமிழ்நாடு.

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகம்"

என்று தொல்காப்பியப் பாயிரம் குறிக்க,

"நீலத்திரைக்கடல் ஓரத்திலே – நின்று
நித்தம் தவம் செய்யும் குமரி அன்னை – வட
மாலவன் குன்றம் இவற்றிடையே – புகழ்
மண்டிக்கிடக்கும் தமிழ்நாடு"

என்று பாரதியார் பெருமிதத்தோடு கூறுகிறார்.

வளமான ஆறுகளும் மலைகளும் நிறைந்த தமிழ்நாடு திறமான மொழியினாலும், உரமான மக்களாலும் பொலிவதாயிற்று.

தமிழர்கள் இன்று உலகெங்கிலும் பரவி வாழ்ந்தாலும் தமிழர்களின் தாயகமாகத் திகழ்வது தமிழ் நாடே.

## 1.4. தமிழ் இயக்கங்கள்

இத்தகைய பெருமைமிக்க வரலாற்றினையுடைய தமிழும் தமிழரும் இந்த அளவிற்கு மேம்பாடையக் காரணங்கள் என்னவென்று சிந்தித்தோமானால் சில உண்மைகள் புலப்படும்.

தொல்பழங்காலத்திலேயே தமிழ் மன்னர் சங்கம் வைத்துத் தமிழையும் தமிழப் பண்பாட்டினையும் வளர்த்தனர். கிறித்து பிறப்பிற்கு முன்னர் இத்தகைய சங்கங்கள் மூன்று அமைந்து தமிழை வளர்த்தன.

### முதற் சங்கம்

தொல்காப்பியப் பாயிரத்தில் 'நிலந்தரு திருவின் பாண்டியன் அவையம்' என்றாற் போல, 'அவையம்' எனமுன்னர் அழைக்கப் பட்டதுதான் 'சங்கம்' எனப் பின்னர் குறிக்கப்படலாயிற்று.

முதல் இடை கடை என்ற மூன்று சங்கங்கள் நிலவின என்ற செய்தி இறையனாரகப் பொருள் உரையால் தெரியவருகின்றது.

முதற்சங்கம் குமரிக்குத் தென்பால் – கடல்கோளுக்கு முன் பரந்திருந்த நிலப்பகுதியில் இருந்த தென்மதுரையில் நிலவியிருந்ததென்றும், அச்சங்கத்தில் அகத்தியர், முரஞ்சியூர் முடிநாகராயர் முதலிய ஐந்நூற்று நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்தனர் என்றும், அவர்களால் பாடப்பட்டவை பரிபாடல், முதுநாரை, முதுகுருகு முதலான நூல்களென்றும், அச்சங்கம் நாலாயிரத்து நானூற்று நாற்பது ஆண்டுகள் நிலவிற்று என்றும் அகத்தியமே இலக்கண நூலாகப் பின்பற்றப்பட்டது என்றும் களவியலுரை கூறுகின்றது.

### இடைச் சங்கம்

இடைச் சங்கத்தில் தொல்காப்பியனார், வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கனார் உள்ளிட்ட ஐம்பத்தொன்பதின்மர் புலவர்களாய் வீற்றிருந்தனர் என்றும், அவர்கள் கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல் முதலிய

நூல்களை இயற்றினர் என்றும், அவர்களுக்கு அகத்தியமும் தொல்காப்பியமும் இலக்கண நூல்களாய் அமைந்தன என்றும், அச்சங்கம் மூவாயிரத்து எழுநூறு ஆண்டுகள் நிலைத் திருந்ததென்றும், புலவர்கள் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரமென்றும் இந்நூல் கூறுகின்றது.

**கடைச் சங்கம்**

கடைச்சங்கப் புலவர்கள் சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், பெருங்குன்றூர்கிழார், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலிய நாற்பத்தொன்பது புலவர்கள் என்றும், அவர்களால் பாடப்பெற்றவை நெடுந்தொகை நானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல் என்றும், அவர்களுக்கு நூலாய் விளங்கியவை அகத்தியமும் தொல்காப்பியமும் என்றும், அச்சங்கம் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகள் உத்தர மதுரையில் நிலவியிருந்த தென்றும் இறையனார் களவியலுரை கூறுகின்றது.

ப ;தொன்பதாம் நூற்றாண்டில் பாண்டித்துரைத் தேவர் மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம் அமைத்தார். டெல்லி, பம்பாய், காஞ்சி, மதுரை ஆகிய இடங்களில் தமிழ்ச்சங்கங்கள் இருந்த போதிலும், உலகம் முழுவதிலுமுள்ள தமிழ் ஆராய்ச்சியாளர்கள் பயன்பெறும் வகையில் இருபதாம் நூற்றாண்டில் தமிழக முதல்வராக இருந்த டாக்டர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர் அவர்கள் ஐந்தாம் தமிழ்ச்சங்கத்தினை அதே மதுரையில் அமைத்தார்.

சங்கங்களின் வரலாறு இவ்வாறிருக்க மற்றும் பல்வேறு வழிகளில் தமிழுக்கு ஏற்றமளிக்கும் அமைப்புகள் பலப்பல தோன்றி வளர்ந்தன.

தமிழ் பயிற்றுவிப்பதற்கென்றே பல தமிழ்க்கல்லூரிகள் தோன்றிய நிலையில், சென்னையிலமைந்த உலகத்தமிழாராய்ச்சி நிறுவனமும் தஞ்சையிலமைத்த தமிழ்ப்பல்கலைக் கழகமும் தமிழை

வளர்க்கும் முயற்ச்சியின் மிகச்சிறந்த அடையாளங்களாகத் திகழ்கின்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பேரறிஞர் அண்ணா அவர்களின் சீரிய முயற்சியால் நிறுவப்பட்டு தமிழாராய்ச்சியின் நிலைக்களனாகத் திகழ்கிறது.

தமிழ்ப்பல்கலைக் கழகம் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர் அவர்களால் தொடங்கப்பட்டு உலகளாவிய தமிழ்ப் பணியினைச் செய்துவருகிறது.

தமிழக அரசின் தமிழ்-பண்பாட்டுத்துறையும், அதன் கீழமைந்த தமிழ் வளர்ச்சி இயக்கமும் தமிழை ஆட்சிமொழியாக்கும் முயற்சியில் முனைந்துள்ளன.

இங்ஙனம் தமிழை வளர்க்கப் பல்வேறு அமைப்புகள் பல்வேறு வகைகளில் செயல்பட, உலக அளவில் தமிழாராய்ச்சியைப் பெருமளவில் ஊக்குவித்ததோடு தமிழ்மாநாடு என்ற பெயரில் தமிழைச் சிறப்பிக்கும் மாநாட்டை நடத்த முற்பட்டதும் 'உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்' என்ற ஓர் அமைப்பேயாகும்.

* * * * *

## 1.5 உலகத் தமிழ்ஆராய்ச்சி மன்றம்

**(INTERNATIONAL INSTITUTE OF TAMIL RESEARCH)**

1786ஆம் ஆண்டு 'சர். வில்லியம் ஜோன்ஸ்' என்பவர், "சமஸ்கிருதம், அவெஸ்தான், கிரிக், இலத்தீன் ஆகிய மொழிகளுக்கிடையே ஒற்றுமை இருக்கிறது" என்பதைச் சுட்டிக் காட்டிய உடனேயே ஐரோப்பிய அமெரிக்க மொழி நூல் அறிஞர்கள் இந்திய மொழிகளில் மிகுதியான ஆர்வம் காட்டத் தொடங்கினர். இருப்பினும் அவர்களால் 'சமஸ்கிருதத்தில்' ஆராய்ச்சிப் பிரிவுகள் தோன்றி வளர்ந்ததே அன்றி தமிழ் அல்லது திராவிட மொழிகள் பற்றிய ஆராய்ச்சி போற்றப் படவில்லை.

18ஆம் நூற்றாண்டு முதலே ஐரோப்பியர்களின் கவனமும் நடவடிக்கைகளும் கல்கத்தா பற்றியே இருந்ததால்

தமிழ்நாடு பற்றிய உணர்வு அவர்களுக்குத் தோன்றவே இல்லை. மேலும் தனித்த பெருமை கொண்டது மட்டுமல்லாமல சமஸ்கிருதத்தையும் சிறப்பித்த தமிழ்மொழி, ஆரிய–திராவிட நாகரிகங்களின் இணைப்புப் பாலமாக இருந்ததனை அறியாமல் இந்தி, வங்காளம், பஞ்சாபி, மராத்தி போன்ற மாகாண மொழிகளுள் ஒன்று மட்டுமே என்று தான் பிறநாட்டு மொழி ஆராய்ச்சியாளர் தவறாகக் கருதிக் கொண்டிருந்தனர்.

மற்றும் உலக நாடுகளில் உள்ள அனைத்து அறிஞர்களும் ஒன்று கூட வேண்டும் என்ற நோக்கில் கீழை நாடுகள் பற்றிய ஆய்வில் ஈடுபட்ட அறிஞர் பெருமக்கள் பலரும் இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை கூடி புதிய ஆய்வுகள் பற்றிய சிந்தனைகளைப் பரிமாறிக் கொண்டனர். இவ்வமைப்பு கீழைநாட்டாய்வாளர்களின் பன்னாட்டு ஒன்றியம் (International Congress of Orientalists) என்ற பெயரில் நடைபெற்று வந்தது. இதிலும் தமிழ்மொழி பற்றிய ஆய்வு மிகக் குறைவாகவே இடம் பெற்றது.

இத்தகு குறைபாடுகளைப் போக்கி தமிழ்மொழிக்கு உலகளாவிய அளவில் உலகக் கவனிப்பை உருவாக்க வேண்டுமென்று தமிழ் அறிஞர் முனைந்தனர். இதனை ஏற்று நடத்த ஓர் அமைப்பு தேவையென்பதை அவர்கள் உணர்ந்தனர். இதன் விளைவாக 7.1.1964இல் புதுதில்லியில் கீழ்த் திசையறிஞர்களின் மாநாடு கூடியபோது தவத்திரு தனிநாயகம் அடிகளார் 'உலகத் தமிழ ஆராய்ச்சி மன்றம்' என்ற ஒன்றினை திருவாளர்கள ஏ. சுப்பையா, பிலியோசர், பர்ரோ, எமனோ, கூப்பர், சுவலெபில் போன்றோர் உதவியுடன் தொடங்கினார்.

## மன்றத்தின் நோக்கம்

தனி நபரின் முயற்சிகளை ஊக்கப்படுத்தவும் உலகம் முழுவதும் தமிழ்ஆய்வை மேற்கொண்டு, சிதறிக் கிடக்கின்ற சிறு நிறுவனங்களின் செயற்பாடுகளை ஊக்கப்படுத்தவும், தமிழ்நாட்டுக்கும், தமிழ் மொழிக்கும் பொதுவானவற்றைப் பரிமாற்றம் செய்து கொள்ளவும் இம்மன்றம் அமைக்கப் பெற்றது.

பிறநாடுகள் பல்கலைக் கழகங்களில் தமிழைப் பாடமாக அமைக்க வேண்டும் என்பதனையும், அப் பல்கலைக் கழகப் பேராசிரியர்களைத் தமிழாராய்ச்சியில் ஈடுபடச் செய்தல் வேண்டும் என்பதனையும், தமிழ்மொழி, தமிழ்க்கலை, தமிழிலக்கியம், தமிழ்ச் சமுதாயம் ஆகியவற்றைப் பற்றி பல்கலைக் கழக மட்டத்தில் நின்று ஆராய்கின்ற அறிஞரிடையே நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்த வேண்டும் என்பதனையும் நோக்காகக் கொண்டு இம்மன்றம் செயல் படத் தொடங்கியது.

## பணிகள்

உலகிலுள்ள அறிஞர் பலரை ஒன்று சேர்ப்பதும், அவர்களை அறிமுகப்படுத்துவதும், அவர்களது ஆராய்ச்சிகளை வெளிப்படுத்த உதவுவதும் இம்மன்றத்தின் சிறப்புப் பணிகளாய் அமைகின்றன. மேலும் பலநாடுகளில் ஆராய்ச்சி செய்கின்ற அறிஞர் தமது ஆராய்ச்சி முடிவுகளைப் பொது மன்றம் ஒன்றிற் சமர்ப்பித்து பயன்பெறவும் இம் மன்றம் வழி வகுத்திருக்கின்றது.

## பயன்

தமிழ் மொழி உலக அரங்கில் அனைத்துச் சிறப்புகளும் பெற்று அறிவியல் மற்றும் பிற துறைகளிலும் தகுதி பெற்றதாக வளர்ந்துவர இம்மன்றம் உறுதுணை புரிகின்றது.

1967இல் யுனெஸ்கோ அமைப்பான 'கீழை நாட்டாய்வாளர்களின் பன்னாட்டு ஒன்றியத்தில்' இம்மன்றம் உறுப்பினராகியது; பின்னர் பன்னாட்டுத் தத்துவ, மானுட இயல்கள் மன்றத்திலும் (International Council of Philosophical and Humanistic Sciences CIPSH) உறுப்பினராக ஏற்கப்பட்டது. இதன்வழி இம்மன்றத்துக்கு யுனெஸ்கோ அமைப்பின் ஏற்புதலும் கிட்டியது. பின் இலங்கை, மலேசியா போன்ற இடங்களில் உலகத் தமிழாராய்ச்சி மன்றத்துக்குக் கிளைகளும் ஏற்பட்டன.

இரண்டாண்டுகட்கு ஒருமுறை 'உலகத் தமிழ் மாநாடு நடைபெற இம்மன்றம் அனுமதியளிக்கின்றது. மாநாடு நடத்தவிரும்பும் நாடுகள்

இம்மன்றத்தின் ஒத்துழைப்புடன் மாநாடுகளைச் சிறப்புற நடத்தி வருகின்றன.

தமிழ் மொழியின் அருமைபெருமைகளை உலகம் இன்னும் சரியாக உணர்ந்து கொள்ள வில்லை. அம்முயற்சியில் ஈடுபட்ட அறவோர், அறிஞர் வரிசையில் தற்காலத்தில் தோன்றி நல்லபணி செய்து வருவது 'இவ்வுலகத் தமிழாராய்ச்சி மன்றம்' இதில் பன்னாட்டுத் தமிழறிஞரும் இடம் பெற்றுள்ளனர். இரண்டாண்டுக்கு ஒருமுறை தமிழாராயச்சிக் கருத்தரங்கு மாநாட்டினைக் கூட்டிப் பல்வேறு அறிஞரையும் அழைத்து பங்கு கொள்ள வைத்து ஆராய்ச்சி எழுத்துரைகளைச் சமர்ப்பிக்கச் செய்து அதன் வழி தமிழரின் . கலை, நாகரீகம் பண்பாடுகளை உலகறியச் செய்து வருகிறது. இம்மன்றத்தால் 1966 முதல் உலகத்தமிழ்மாநாடு நடத்தப் பெற்றது; 1989 வரை ஏடு மாநாடுகள் நடத்தப் பெற்றுள்ளன தற்போது எட்டாம் மாநாட்டினை தமிழக அரசின் மாபெரும் ஒத்துழைப்புடன் நடத்த விருக்கின்றது.

இந்நூலுள் நடைபெற விருக்கின்ற எட்டாம் மாநாட்டைப் பற்றிய குறிப்புகளும், நடந்து முடிந்த ஏழு மாநாடுகளைப் பற்றிய குறிப்புகளும் முன்னோட்டமாகச் சிந்திக்கப் பெறுகின்றன.

தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் எனச்சிறப்பிக்கப்பட்ட தஞ்சை என்ற தஞ்சாவூர், கிழக்கில் நாகபட்டினம் காயிதே மில்லத் மாவட்டமும், தெற்கில் (தென் கிழக்கில்) வங்காள விரிகுடாவும், மேற்கில் புதுக்கோட்டை மாவட்டமும், வடக்கில் திருச்சி மற்றும் தென்னாற்காடு வள்ளலார் மாவட்டங்களையும் எல்லையாகக் கொண்டு அமைந்துள்ளது. இது பிற்காலச் சோழர்களின் தலை நகரமாக விளங்கியது. 1798இல் ஆங்கிலேயர்கள் இதை ஒரு மாவட்டமாக்கினர். இம் மாவட்டத்தலைநகர் தஞ்சாவூர். இதன் பரப்பளவு 3602.86 சகி.மீ, மக்கள் தொகை 2138845. இதில் ஆண்கள் 10.70 இலட்சம். பெண்கள் 10.68 இலட்சம். இங்கு பழங்குடியினர் 0.04 இலட்சம். இது தவிர சைவ அடியார்களான அப்பர், மாணிக்க வாசகர், சம்பந்தர், சுந்தரர் போன்றோரும், கவிஞர்களான கம்பர், ஒளவையார் தவிர இராசராச சோழன்,

சரபோஜி மகாராசா, விஜய ரகுநாத நாயக்கர் போன்ற மன்னர்களும் தஞ்சாவூரோடு தொடர்பு கொண்டுள்ளவர்கள்.

'பாட்டுக்கு ஒரு புலவன் பாரதி' என்று சொல்வது போல, 'தமிழுக்கு ஒரு தீபம் தஞ்சை' என்று கூறுவது பொருத்தமாக அமையும்.

1995 ஜனவரி முதல் தேதி முதல் ஐந்தாம் தேதி வரை நடைபெறவுள்ள எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டிற்கு மாண்புமிகு தமிழக முதலமைச்சர் ஜெ. ஜெயலலிதா அவர்கள் தலைமை தாங்குகின்றார்.

தமிழ்ப்பண்பாடு, கலாச்சாரம் மற்றும் தமிழ் இலக்கியங்களைச் சித்தரிக்கும் வகையில் மிகுந்த கலைநுட்பத்துடன் கூடிய 54 அலங்கார ஊர்திகள், கலைநிகழ்ச்சிகள், கண்காட்சிகள் முதலியன மாநாட்டில் இடம்பெற உள்ளன.

தஞ்சைப் பல்கலைக் கழகத்தில், உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத் தலைவர் பேராசிரியர் நோபோரு கரஷிமா தலைமையிலான ஆய்வரங்கக் குழு பொறுப்பில், சிறப்பு நிலைக் கருத்தரங்குகள் நடைபெறவிருக்கின்றன. மற்றும் மாநாட்டின் போது சிறப்பு மலர், அறிவியல் மலர், மாணவர் மலர் என்ற மூன்று மலர்கள் வெளிவர உள்ளன.

மாநாட்டின் போது இராஜராஜ சோழன் உருவம் பொறித்த நினைவு அஞ்சல் தலையும், திருவள்ளுவர் நாணயமும் வெளியிடப்பட வேண்டும் என்று தமிழக அரசு மத்திய அரசைக் கேட்டுக் கொண்டுள்ளது.

மாநாட்டுக்காக தமிழ் இலக்கியத்தின் சிறப்பினை பறைசாற்றும் வண்ணம் திரைப்படம் ஒன்றினை தமிழக அரசு தயாரித்து வெளியிட உள்ளது.

தமிழ்ப் பல்கலைக் கழகம் மாநாட்டுப் பணிகள் தொடர்பாக ஆற்றக்கூடிய முக்கியப் பணிகளைக் கருத்தில் கொண்டும், தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சிறந்ததோர் பணிதமிழ் உலகிற்குத் தங்கு தடையின்றி செவ்வனே கிடைத்திடவும் நிதிப்பற்றாக்குறை

தடையாக இருத்தலாகாது என தஞ்சைப் பல்கலைக் கழகத்திற்கு நிதி ஒதுக்கீடு செய்து தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

மேலும் இம்மாநாடு நடப்பதை முன்னிட்டு காவிரியால் பூவிரியும் தஞ்சையில் பல வசதிகள் செய்யப்பட்டுவருகின்றன. அவையாவன :

தமிழ்ப் பல்கலைக்கழக வளாகத்தில் திருவள்ளுவர் சிலை வைக்கப்பட இருக்கும் மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

எட்டாவது உலகத் மாநாட்டின் நினைவாக 'நினைவுத் தூண்' தொல்காப்பியர் சதுக்கத்தின் அருகே அமைக்கப்பட்டுள்ளது.

மிகக் குறுகலாக இருந்த தஞ்சாவூர் இரெயில் பாலம், போக்குவரத்து வசதிக்காக மேம்பாலமாக அகலப்படுத்தப்படுகிறது. அதுபோல் இரெயில்வே கீழ்பாலம் புதிதாக விரிவாக்கப்பட்டுள்ளது. பேருந்து நிலையம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

பேராளர்கள், பார்வையாளர்கள் தங்குவதற்குரிய வீடுகளும், அடுக்குமாடிக் குடியிருப்புகளும் கட்டப்பட்டுள்ளன.

பல்கலைக்கழக வளாகத்தில் புதிய கலையரங்கம் அமைக்கப்பட்டுள்ளது.

11 கோடி ரூபாய் செலவில் சுற்றுச்சாலை கட்டப்பட்டு வருகிறது.

அரண்மனை வளாகத்திலுள்ள மணிமாடத்தை தொல்பொருள் ஆய்வுத் துறையினர் புதுப்பொலிவு காட்ட புனரமைப்பு செய்துள்ளனர்.

மாநாட்டுக்கு வருகைதரும் மக்களை வரவேற்க திருச்சி சாலையில் வரவேற்பு வளைவு அமைக்கப்பட்டுள்ளது.

சேரன் செங்குட்டுவன் தோரணவாயில், குந்தவை தேவி தோரணவாயில், கும்பகோணம் சாலையின் அருகே அதியமான் தோரணவாயில் ஆகியன சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு தஞ்சைத் தரணி விழாக்கோலம் பூண்டு தமிழண்ணைக்குச் சிறப்பெடுக்கும் இவ்வேளையில் அதற்கு

முன்னதாக பல்வேறு நாடுகளில் அதற்கு முன்னதாக பல்வேறு நாடுகளில் நடைபெற்ற ஏழு மாநாடுகளின் வரலாற்றுச் சுருக்கம் இங்கு தரப்படுகிறது.

## 1..6. உலகத்தமிழ்மாநாடு

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்தகுடி"

என்று போற்றப்படும் தமிழ்க்குடியை உலகின் தலைக்குடியாக மாற்ற வேண்டும் என்ற அவாவின் செயல் வடிவமே 'உலகத் தமிழ் மாநாடு'கள். அதாவது செந்தமிழின் வளர்ச்சிக்காகவும், தமிழ் கூறு நல்லுலகத்தின் மேன்மைக்காகவும், தேமதுரத் தமிழோசையை உலகெலாம் பரப்ப வகை செய்வதற்காகவும் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் தான் 'உலகத் தமிழ் மாநாடு'.

மொழிக்கு ஒரு மாநாடு உலக அளவில் கொண்டாடும் வரலாற்றைத் தொடங்கியவர் தமிழ் மக்களேயாவர். இந்திய மொழிகளுள் தொன்மையான தமிழ் உலகம் பரவிய மொழியாகவும், உலக நாடுகளில் தமிழ்க் குடிகளைக் கொண்டதாகவும், வேறுநாடுகளில் ஆட்சி மொழிகளாகவும் திகழ்கின்ற பெற்றுனையுடையது. எனவே தமிழின் அருமையையும் பெருமையையும் உலகுக்குணர்த்தவும், உலக நாடுகளில் தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சியினை ஊக்குவிக்கவும், பல்வேறு நாடுகளின் அறிவுசால் பெருமக்கள் தமிழின் சிறப்புகளை விவாதித்து அதன் வாயிலாக விளக்கம் பெறவும், தமிழர் பல்லாயிரவர் குழுமியிருந்து தமிழ் மொழிச் சுவையைப் பருகவும் 'உலகத் தமிழ் மாநாடுகள் தோன்றின.

தமிழகத்திலுள்ள எத்துறையினரும், ஏந்நிலையினரும், எவ்வகையினரும், எவ்வழியினரும், எத்தகுதியினரும், எச்சமயத்தினரும், எப்பிரிவினரும், எக்கட்சியினரும், எல்லாம் பாலினரும், எல்லாப் பருவத்தினரும் பங்கு பெறக்கூடிய மாநாடு இது. தமிழர் மட்டுமன்றி தமிழ் ஆர்வலர் அனைவரும் கலந்து கொள்ளத் தக்க வகையில் மாநாடு செயல்படுத்தப் படுகின்றது.

## 1.6.1. முதல் உலகத் தமிழ்மாநாடு – 1966

முதல் உலகத் தமிழ்மாநாடு 1966 ஏப்ரல் 16ஆம் தேதி முதல் 23 ஆம் தேதி வரை மலேசியாவின் தலைநகர் கோலாலம்பூரில் மாண்பு மிகு வி.தி. சம்பந்தன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

### மலேசியா

மலேசியா 13 மாநிலங்களின் கூட்டமைப்பைக் கொண்டிலங்குகிறது ஒவ்வொடு மாநிலமும் அதன் தனித்துவத்தோடு சுய ஆட்சி வரம்பு பெற்றுள்ளன. 1957இல் மலேசியா சுதந்திரம் அடைந்து. இந்நாட்டின் மக்கள் தொகை–1, 88,00,000. பரப்பளவு சுமார் 3,30,434 சகி.மீட்டர். இந்நாட்டின் மொழிகள் மலாய், ஆங்கிலம், சீனம், தமிழ் போன்றவை. இங்குள்ளவர்கள் 80 விழுக்காடு எழுத்தறிவு பெற்றவர்களாவர். இவர்களது சமயம் இஸ்லாம், புத்தம், இந்து ஆகியன. இந்நாட்டின் நாணயம் ரிங்கட் (ஒரு டாலர் = 2.63 ரிங்கட்).

மலேசிய மக்கள் தொகை பல இனமக்களைக் கொண்டது. மொத்த மக்கள் தொகையில் 55 விழுக்காடு மலேயர்களும், 33.4 விழுக்காடு சீனர்களும், 10.1 விழுக்காடு இந்தியர்களும், 1.4 விழுக்காடு பிற நாட்டவர்களையும் கொண்டு விளங்குகிறது. இந்நாட்டில் 18 இலட்சம் பேர் தமிழ் பேசும் மக்களாகத் திகழ்கின்றனர்.

இம்மாநாடு துங்கு அப்துல் ரஹ்மான் மண்டபத்தில் திறப்பு விழாக் கண்டது. தமிழ்கூறு நல்லுலகம் கண்டிராத வகையில் முதல் தடவையாகப் பல துறைகளில் புலமை பெற்ற அறிஞர் பெருமக்கள் ஒன்றுபட்டு முதலாவது தமிழ் ஆராய்ச்சி மாநாட்டை கோலாலம்பூரில் நடத்தினர். மலேசியாவின் முதலாவது பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் முதல் உலகத் தமிழ் மாநாட்டைத் தொடங்கி வைத்தது சிறப்பிற்குரியதாக அமைந்தது.

இம்மாநாட்டை மலாயாப் பல்கலைக் கழகம், தேசிய இந்தியக் கல்வி வளர்ப்பு மன்றம், உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் ஆகிய

மூன்று அமைப்புகளும் கூட்டாக நடத்தி முடித்தன. தனிநாயக அடிகளாரின் பெருமுயற்சியால் மலேசியா அரசின் ஆதரவுடன் மாநாடு ஏழு நாட்கள் சிறப்பாக நடைபெற்றது.

## கருத்தரங்கு

கருத்தரங்கு ஏப்ரல் 18 முதல் 22 வரை ஐந்து நாட்கள் நடைபெற்றது. 240 பேராளர்களும், 50 பார்வையாளர்களும் பதிவு செய்திருந்தனர். இவர்களில் 132 பேராளர்களும் 40 பார்வையாளர்களும் கலந்து கொண்டனர். 150 கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பெற்றன. மொழிக்காக மொழியின் வளர்ச்சிக்காக முதல் உலகத் தமிழ் மாநாடு நடத்தப்பட்டதால் "இன்றைய உலகில் தமிழ் மொழியின் பங்கும் மேம்பாடும்" என்பதும், "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பதும் மாநாட்டின் கருப் பொருள்களாய் அமைந்தன. பெரும்பான்மை ஆங்கிலக் கட்டுரைகளும், மிகக் குறைந்த அளவு தமிழ்க் கட்டுரைகளும் இடம் பெற்றன. இக்கட்டுரைகளின் தொகுப்பு இரண்டு பகுதிகளாக ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது. முதற் தொகுதியில் 763 பக்கங்கள் கொண்ட 58 கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் 897 பக்கங்களை கொண்ட 88 கட்டுரைகளும் அடங்கியுள்ளன.

## சொற்பொழிவு

மாநாடு முடிந்தபின் பொதுமக்கள் பயனடையும் பொருட்டு ஏப்ரல் 24, 25 ஆகிய இரு நாட்களில் ஆங்கிலத்தில் ஒன்றும், தமிழில் இரண்டுமாக மூன்று சொற்பொழிவுகள் நடைபெற்றன.

## மாநாட்டு மலர்

மாநாட்டில் வெளியிடப்பட்ட தமிழ் மாநாட்டுச் சிறப்பு மலர்" முழுவதும் ஆங்கில மொழியில் அமைந்தது. இம்மலரின் விலை 125 ரூபாய். இம்மலர் ஆங்கில மொழியில் அமைந்ததால் தமிழ் அறிஞர் அனைவரும் அறிந்து கொள்ள முடியாமல் போனது என்று சிலம்புச் செல்வர் ம.பொ.சி வித்தனர். இம்மலர் கிடைக்கப் பெறவில்லை போன்றோர் கருத்துத் தெரி.

**கண்காட்சி**

மாநாட்டில் இரண்டு கண்காட்சிகள் நடந்தன. முதல் கண்காட்சியை மலேயா நாட்டுக் கல்வி மந்திரி என்ஜி. முகமட்கிர் சோகாரி தொடங்கி வைத்தார். இதில் தென் கிழக்கு ஆசியநாடு தொடர்பான சிற்பங்கள், தொல் பொருள் கண்டு பிடிப்புகள் இடம் பெற்றன. இரண்டாவது கண்காட்சியில் அரிய நூல்கள், படங்கள், நூல் வெளியீடுகள் முதலியன இடம் பெற்றிருந்த. இதனை மாண்புமிகு தமிழக முதலமைச்சர் .எம். பக்தவத்சலம் தொடங்கிவைத்தார்.

**கலை நிகழ்ச்சி**

மாநாட்டில் மலேசிய நாட்டுக் கலை நிகழ்ச்சிகள் பல நடைபெற்றன.

மாநாட்டில் கலந்து கொண்ட பெருமக்கள் அனைவரும் விரும்பும் வண்ணம் பொழுது போக்கு நிகழ்ச்சிகளை அமைத்திருந்தனர். மலேசிய நாட்டு மக்களின் விருந்தோம்பும் பண்பை விருந்தோம்பல் வாயிலாக நிரூபித்துக் காட்டி அவர்களின் மாண்பினை அறிய வைத்தது சிறப்பிற்குரியதாகவும், போற்றும்படியாகவும் அமைந்திருந்தது.

உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் நடத்திய இந்த முதலாவது உலகத் தமிழ் மாநாடு ஒரு கருத்தரங்கம் என்கிற அளவிலேயே நடைபெற்றது. இம்மாநாடு நடைபெற மலேய மக்கள் அனைவரும் பொருளுதவி செய்து மாநாடு சிறப்புற அமைய வழிவகுத்தனர் என்பது போற்றற்குரியது.

## 1.6.2. இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு – 1968

இரண்டாவது மாநாடு சென்னையில் தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணாவின் தலைமையில் 3–1–1968 முதல் 10–1–68 வரை எட்டு நாட்கள் பெருஞ்சிறப்புடன் நடந்தேறியது.

**சென்னை**

தெற்கு, வடக்கு மேற்குப் பகுதிகளில் செங்கை எம்.ஜி.ஆர்

மாவட்டமும், கிழக்கில் வங்காள விரிகுடாவும் எல்லைகளாகக் கொண்ட சென்னை நகரம் 1959இல் தோற்றுவிக்கப்பட்டது. பிரான்சிஸ்டே என்ற ஆங்கிலேயர் 1640 இல் புனித ஜார்ஜ் கோட்டையைக் கட்டினார். இங்கு 1688 இல் சென்னை மாநகராட்சி உருவாக்கப்பட்டது. இந்நகரம் 1746, 1758, 1772 ஆண்டுகளில் பிரெஞ்சுக்காரர்களின் கட்டுப்பாட்டில் இருந்தது. அதன்பின் சுதந்திரம் பெறும்வரை ஆங்கிலேயரின் கீழ் இருந்தது.

இது தமிழகத்தின் தலைநகர் பரப்பளவு 170 ச.கி.மீ. இந்நகரின் மக்கள் தொகை – 37,95,028. இதில் ஆண்கள் – 19,66,408; பெண்கள் – 18,28,620. வளர்ச்சி விகிதம் – 15.82 விழுக்காடு (1981–91). எழுத்தறிவு பெற்றவர்கள் – 27,53,094. மக்கள் நெருக்கம் ச.கி.மீட்டருக்கு 21,811. ஆண், பெண் விகிதம் –930 (100 ஆண்டுகளுக்கு).

## தொடக்க விழா

இசையரசு எம்.எம். தண்டபாணிதேசிகரின் தமிழ்த்தாய் வாழ்த்துடன் மாநாடு தொடங்கியது. இந்தியர் குடியரசுத்தலைவர் டாக்டர் ஜாகீர் உசேன், மாநாட்டினைத் தொடங்கி வைத்தார்; பேரறிஞர் அண்ணா தலைமை யேற்றார்.

கல்வியமைச்சர் இரா. நெடுஞ்செழியன் விழாக்குழு சார்பிலும், செயதித்துறையமைச்சர் திருமதி. சத்தியவாணி முத்து தாய்குலத்தின் சார்பிலும் அனைவரையும் வரவேற்றனர்.

மலர்க்கு பூசார்பில் எம்.ஜி. ராமச்சந்திரன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்.

பன்னாட்டறிஞரும், தமிழ் ஆராய்ச்சிக் கழகத் தலை வருமான பேராசிரியர் பில்லியோசர் விழாக்குழு சார்பில் வரவேற்று உரையாற்றினார்.

அடுத்து காமராசர் உரைக்குப்பின் உலகத் தமிழ்க் கருத்தரங்கு அழைக்குநர். திரு. அ. சுப்பையா வாழ்த்துச் செய்திகளைப் படித்தார்.

பொதுப்பணித்துறை அமைச்சர் திரு.மு. கருணாநிதி, உணவமைச்சர் திரு. கே.ஏ. மதியழகன், அமைச்சர் மா. முத்துச்சாமி,

ஆகியோர் உரைக்குப்பின் உலக நாடுகள் மன்றத்தின் (ஐ.நா.) கல்வி–அறிவியல் பண்பாட்டு அமைப்புத் தலைமை இயக்குநரான திரு. மா. ஆதிசேஷையா அவர்களும், இலங்கை உள்ளாட்சித் துறையமைச்சர் திரு. திருச்செல்வம் அவர்களும், வாழ்த்துரை வழங்கினர்.

இறுதியாக திரு. மு.நா. பெருமாள் நன்றி நவின்றார்.

## சிலை திறப்பு

உலகத் தமிழ் மாநாட்டையொட்டி ஜனவரி இரண்டாம் நாள் மெரீனா கடற்கரையில் ஔவையார், கண்ணகி, கம்பர், டாக்டர் ராபர்ட் கால்டுவெல், டாக்டர் ஜீ.யு.போப், திருவள்ளுவர், பாரதி, பாரதிதாசன், வ.உ. சிதம்பரம், வீரமாமுனிவர் ஆகியோருக்கு பத்துச் சிலைகள் திறக்கப்பட்டன. ஜனவரி முதல் தேதி சர்.ஏ. இராமசாமி முதலியார் அண்ணா சிலையை மலைச்சாலை வட்டப்பகுதியில் (மவுண்ட் ரோடு ரவுண்ட்டாணா) திறந்து வைத்தார். தமிழ்ப்பண்பாட்டையும் வரலாற்றையும் கருத்தில் கொண்டு இச்சிலைகள் திறக்கப்பட்டன.

## கருத்தரங்கு

இம்மாநாட்டில் 500 பேராளர்கள் கலந்து கொண்டனர். இந்தியப் பேராளர்கள் 250 பேர். இரஷ்யா போன்ற 30 நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தனர். 4–1–68 முதல் 10–1–68 வரை கருத்தரங்கு நடை பெற்றது. சென்னைப் பல்கலைக் கழக மண்டபத்தில் 36 அமர்வுகளில் பல்வேறு அறிஞர்களின் தலைமையில் கருத்தரங்குகள் நடைபெற்றன. கருத்தரங்கில் இலக்கியம், கல்வி, சமூக உறவு, கலை, தொல் பொருள், அறிவியல், தொழில் நுட்பம், மொழியியல் ஆகிய எட்டு வகையான ஆராய்ச்சிகள் நடைபெற்றன. டாக்டர் மால்கம் ஆதிசேஷய்யா கலந்து சொற்பொழிவாற்றினார். டாக்டர் சங்காலியா, டாக்டர் ஜிவலபில், திரு. ஐ. மகாதேவன், டாக்டர் ஹசர், டாக்டர். மர் முதலியோரின் கட்டுரைகள் குறிப்பிடத்தக்க கட்டுரைகளாக அமைந்தன. படிக்கப்பட்ட கட்டுரைகள் தொல் பொருள் ஆய்வு,

மொழியியல் ஆய்வுக் கட்டுரைகள் மற்றவற்றைவிட அதிக அளவில் அமைந்தன.

ஆராய்ச்சிக் கருத்தரங்கின் இறுதிநாளில் அறிஞர் அண்ணா அவர்கள் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகையில், எத்தகைய தொன்மையும் செழுமையுமிக்க மொழிக்கும் பாரம்பரியத்திற்கும் நாம் சொந்தக்காரர்கள் என்பதையும், நமது ஆராய்ச்சியின் நோக்கம் எத்தன்மையதாய் அமைந்திடல் வேண்டும் என்பதையும் பின்வருமாறு விளக்கினார்.

"கருத்தரங்கு அல்லது ஆராய்ச்சி அரங்குகளில், முடிந்த முடிவுகளை எடுத்துக் கூறி, அவை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்று எதிர்பார்த்தல் கூடாது.

சிந்தனைகளைத் திரட்டிக் கோவைப்படுத்தி விடுவதே கருத்தரங்கின் பணி. தங்கள் கருத்து பிறரின் கருத்தோடு எந்த அளவு ஒத்துப்போகிறது, வேறுபடுகிறது என்பதை அறிந்து மேலும் அது குறித்த விவாதத்துக்கு வழிவகுத்து உருவாகிய கருத்துகளை வைத்திட வேண்டும்.

கருத்தரங்கின் முன்வைக்கப்பட்ட கருத்துகள், மக்களைப் புதுவழியில் சிந்திக்கத் தூண்டிடும் தன்மையன : புதிய கோணங்களிலிருந்து உண்மையை அறிந்திடத் தூண்டும் அளவுக்கு மிக உயர்ந்த தரத்தை உடையன.

ஆராய்ச்சி அறிஞர்களின் நோக்கமெல்லாம், தமிழ் மொழியின் தொன்மையை ஆராய்ந்து அதன் வயதைக் கணிப்பதாகவும், மக்களின் - உலக மக்களின் எண்ணங்களை எடுத்துரைக்கக் கூடியதாகவும் - நாடுகளுக்கிடையேயான அறிவார்ந்த கருத்துப் பரிமாற்றத்துக்குப் பயன்படக் கூடியதாகவும் தமிழ் மலர வேண்டுமென்பதுதான்.

'தமிழ்மொழி, தொன்மைமிக்கது' என்பதாலேயே ஒரு தொல்லை ஏற்படுகிறது. அதற்குப் புறம்பான சிலவற்றைப் புகுத்திக் கூறிடவும், ஐயப்பாடுகள் சிலவற்றை எழுப்பிடவும், ஏற்புடைத்தாகச் சிலவற்றைக் கூறிடவும், விரோதமானதைச் சொல்லிடவும்,

தேவையானதை எடுத்துக் கூறவும், மொழியின் தொன்மை காரணமாகவே இடமேற்பட்டு விடுகிறது. உலகெங்கும் உள்ள பழைய கோட்டைக் கொத்தளங்கள் குறித்தும், பழைய கருத்துகள் – முறைகள் ஆகியவை குறித்தும் இவ்வாறு நிகழ்கிறது. ஆராய்ச்சியாளர்களின் பணியானது, உண்மையைக் கண்டறியக் கூடியதாக இருக்க வேண்டும். உண்மை, எளிதில் கைக்குச் சிக்காது – நழுவி ஓடிவிடும் தன்மையுள்ளது ! இதற்கு ஆராய்ச்சியாளர்கள் மிகப் பலர் தேவை! ஆண்டுகள் மிகப் பல தேவை !

தமிழ்மொழி நவீன மொழிகள் அனைத்துக்கும் இணையாகவும் உள்ளது ; புத்தம் புதிய கருத்துகளைத் தெரிவிக்கவும் தமிழால் முடியும் என்பதை ஆராய்ச்சியாளர்கள் கண்டுள்ளனர். இந்த உண்மையை எவ்வாறு நிலைநாட்டுவது? பல்வேறு கருத்துகளையும் ஆராய்ந்து பார்ப்பதன், ஏற்பதன் வழி தான் இதனைச் சாதிக்க இயலும்."

அண்ணா அவர்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அமைப்பது குறித்தும், அதன் அமைப்பு விதிகளைக் குறித்தும் டாக்டர் கட்ரே (பூனா) வழங்கிய கட்டுரையைச் சுட்டி, "பிரான்ஸ் நாட்டிலுள்ள பிரெஞ்சுக் கழகம் போல் இந்நிறுவனம் விளங்கட்டும். தமிழக அரசு தன்னாலியன்ற நிதி உதவியை இந்நிறுவனத்திற்கு வழங்கும்" என்று கூறினார்.

1968இல் நடைபெற்ற இக்கருத்தரங்கக் கட்டுரைகள் 1971இல் நூலாக வெளிவந்தன. மொத்தம் மூன்று தொகுதிகளாக இந்நூல் வெளிவந்தது. முதலிரண்டு தொகுதிகள் ஆங்கிலத்திலும், 3ஆம் தொகுதி தமிழிலும் அமைந்திருந்தன. முதலிரண்டு தொகுதிகளில் ஒன்று முதல் 136 கட்டுரைகள் 1056 (498 + 558) பக்கங்களில் அமைந்துள்ளன. 3–ஆம் தொகுதியில் 236 பக்கங்களில் 27 கட்டுரைகள் இடம் பெறுகின்றன.

## முத்தமிழ் மாநாடு

பூம்புகார் நகரெனச் சென்னையிலே அமைக்கப்பட்ட தீவுத்திடலில் நாள்தோறும் நற்றமிழ்த் தேன்மழையாக முத்தமிழ் மாநாடு நடைபெற்றது. இதில் தமிழ்ப் பேரறிஞர் பலரும் பல்வேறு

தலைப்புகளில் சொற்பொழிவாற்றினர். முதல்நாள் 'தொல்காப்பிய ஆங்கில மொழிபெயர்ப்பு' 'தமிழியல் காட்சிகள்' என்ற நூல்கள் வெளியிடப்பட்டன.

இரண்டாம்நாள் பிச்சைக்குட்டி குழுவினரின் வில்லிசை நிகழ்ச்சியுடன் 'திருக்குறள் உரைக் கோவை மாநாடு' தொடங்கியது. இதனை குன்றக்குடி அடிகளார் தொடங்கி வைத்து உரை நிகழ்த்தினார்.

நாமகிரிப் பேட்டை கிருட்டினன் குழுவினரின் நாயன இசையுடன் 9-1-68 அன்று ஆறாம் நாள் நிகழ்ச்சி தொடங்கியது. இசைக்குப்பின் 'தமிழ்க் கவிதை' என்ற தலைப்பில் கவியரங்கம் நடைபெற்றது.

வளரும் தமிழ் என்ற பொதுத்தலைப்பில் 'அரசியலே தமிழை வளர்க்கிறது', ' கல்வியே தமிழை வளர்க்கின்றது', 'பத்திரிகைகளே தமிழை வளர்க்கின்றன' என்ற தலைப்புகளில் பட்டிமன்ற நிகழ்ச்சி நடைபெற்றது.

புலவர் இராமையா திருக்குறளின் எண்களை அல்லது பொருள்களை அல்லது வார்த்தைகளைக் கூறினால் அதற்குரிய குறளை உடனே சொல்வது, குறளைத் தலைகீழாய்ச் சொல்லுவது, கவிதை எழுதுவது போன்ற அவதானங்களைச் செய்து காட்டினார். வேதகிரியின் நூதன கட நிகழ்ச்சியும், மகாலிங்கக் குருக்களின் சங்கு இசையும் நடைபெற்றன. பாரதியாரின் பேத்தி லலிதா பாரதி, பாரதியாரின் பாடல்களைச் சிறப்புறப் பாடிக் காட்டினார். அண்ணாமலையின் நாயன இசை நிகழ்ச்சி நடந்தது. 'தமிழின் பொற்காலம்' என்ற தலைப்பில் சொற்பொழிவுத் தொடர் நடைபெற்றது.

10-1-68 ஏழாம் நாள் நிகழ்ச்சி மதுரை சேதுராமன் குழுவினரின் நாயன இசையுடன் தொடங்கியது. பின் திரு. அய்யாவுவின் 'புல்புல்தாரா' இசையும், எஸ்.டி. சுப்புலட்சுமி குழுவினரின் திருவள்ளுவர் கதையிரங்கும் நடைபெற்றன. குடந்தை டி.என். சீனிவாசன் பாரதிதாசனின் பாடல்களைப் பாடினார்

'காலமும் கருத்தும்' என்ற தலைப்பில் சொற்பொழிவு நிகழ்ந்தது. மாலை நிகழ்ச்சி குடந்தை சீனிவர்சனின் இனிய இசை முழக்கத்துடன் தொடங்கியது. 'புகாரில் ஒருநாள்' என்ற நூல் வெளியீட்டுவிழா நடந்தது. இறுதியில் அண்ணா வீரமும் எழுச்சியும் மிக்க சொற்பொழிவாற்றினார். பின் அரங்கில் டி.கே.எஸ். சகோதரர்களின் இராசராச சோழன் நாடகம் நடைபெற்றது.

கவிதைப் போட்டி, பேச்சுப்போட்டி முதலியவற்றில் வெற்றி பெற்றோர்க்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. தாய்மார்களுக்கென்றே 'மகளிர் நாள்' என ஒன்று ஒதுக்கப்பட்டது.

வருகிற கல்வி ஆண்டான 1968 – ஜூன் முதல் புதுமுக வகுப்பில் அறிவியல் பாடங்கள் அனைத்தும் தமிழில் கற்றுத் தரப்படும். தமிழ் பாடமொழியாக ஆக்கப்படும் என்று அந்நாளைய கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் தம் உரையின்போது கூறினார்.

### மலர் வெளியீடு

உலகத் தமிழ் மாநாடு விழாமலர் தமிழ் நாட்டு ஆளுநர் சர்தார் உஜ்ஜல்சிங் அவர்களால் வெளியிடப்பட்டது. மலரில் 'நுழைவாயில்' என்ற பகுதியில் மாண்புமிகு எம்.ஜி.ஆரின் அறிமுகக் கட்டுரை அமைகிறது. மலரின் பொருளடக்கத்தில் 91 தலைப்புகள் 391 பக்கங்களில் இடம் பெறுகின்றன. இவற்றுள் கவிதை நீங்கலாக 80 கட்டுரைகள் இடம் பெறுகின்றன. மலரின் உட்பகுதி தொடரெண் தரப்படாமல் உட்தலைப்புகளுக்கேற்ற எண்களைப் பெறுகின்றது.

### ஊர்வலம்

முன்னே நான்கு யானைகள் ஒன்றன்பின் ஒன்றாய் வர தமிழ்ப் பண்பாட்டுச் சுரங்கத்தின் கருவகழ்ந்து தேர்ந்தெடுத்த எழிற்காட்சிகளைத் திறம்படச் சித்திரங்களாக்கிய அலங்கார

ஊர்திகள் 27 வலம் வர 'இப்படை தோற்கின் எப்படை செயிக்கும்' என்ற அளவில் மிகப் பெரிய ஊர்வலம் நடை பெற்றது.

## கலை நிகழ்ச்சிகள்

ஒவ்வொரு நாள் விழாவும் தொடங்கும் போக அரிய இசை விருந்துடன் தொடங்கப்பெற்றமையே சிறந்த கலை நிகழ்ச்சிகள் என்று கூறுமளவு அமைந்தன. இவை தவிர நாள்தோறும் பட்டமளிப்பு விழா மண்டபத்தில் பரத நாட்டிய நாடகமும், அண்ணாமலை மன்றத்தில் இசை அரங்கமும், நாட்டிய நாடகங்களும், தீவுத் திடலில் இசை நிகழ்ச்சிகளும், நடன நாடக நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## கலைக்காட்சி

சனவரி மூன்றாம் நாள் காலை சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வு மண்டபத்தில் நடைபெற்ற கலைப்பொருட்காட்சிக்கு சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர், ஆ. இலக்குமணசாமி முதலியார் தலைமை தாங்கியுள்ளார். மூதறிருர் இராஜாஜி அவர்கள் கலைக்காட்சியைத் திறந்து வைத்துள்ளார். இக்கலைக் காட்சியில் தமிழகத்தின் பல்வேறு சிறப்புகள் வெளிப்பட்டன.

கற்காலம் முதல் நம்முடைய வாழ்க்கை எப்படியெல்லாம் வளர்ந்து வந்திருக்கிறது என்பதற்கான சான்றுகள் கலைக்காட்சியில் இடம் பெற்றிருந்தது.

அகழ்வாராய்ச்சியில் கிடைத்த வரலாற்றுச் சான்றுகள் நாகபுரியிலிருந்து இக்காட்சிக்கு கொண்டு வரப்பட்டன; பூம்புகார் உறையூர் அகழ்வாராய்ச்சிகளில் கிட்டிய பொருள்களும் இடம் பெற்றன. அருக்கன்மேடு, ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களில் கிடைத்த பாண்டங்கள் காட்சியளித்தன; தமிழக, வெளிநாட்டு நாணயங்களும், சிலப்பதிகாரக் காலத்து காவிரிப் பூம்பட்டினத்து படிமமும், நால்வகை நிலங்களின் தோற்றமும் காணப்பட்டன.

தமிழகத்தின் கட்டடக்கலை, பல்வேறு சிற்பக்கலை பற்றிய சிறப்புக்களையும், மரம் – கல் – உலோகம் – சுதை மண்

முதலியவற்றாலான உருவங்களும் பொருட்காட்சியில் கொலுவீற்றிருந்தன; சங்ககாலம் முதல் பல்வேறு இலக்கியங்களில் காணப்படும் சொல்லோவியங்கள் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டன; கல்வெட்டுகள், செப்பேடுகள், நடுகற்கள் இடம்பெற்றன; சுமார் 2500 ஆண்டுகளாகத் தமிழ்எழுத்து எப்படியெல்லாம் வளர்ந்து வந்திருக்கிறது என்பது காட்டப்பட்டது; போர்க்கருவி, மன்னர்தம் மங்கலப் பொருட்கள், மற்றும் பல தொல்பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன.

இசைக்கருவிகள், அணிகலன்கள், தங்கம், வெள்ளி, மரம் ஆகியவற்றாலான வாகனங்கள், பதுமைகள், பாத்திரவகைகள் பொருட்காட்சியில் கண்ணைக் கவரும் வகையில் அமைந்தன.

எண்ணற்ற ஏடுகளையும், காணற்கரிய நூல்களையும், சுவடிகளையும், எழுத்தாணி வகைகளையும் சித்தமருத்துவர் காட்சியில் வைத்திருந்தனர். சித்த மருத்துவ முறைகள் பற்றிய பல்வேறு நிலைகளையும் உணர்த்தும் ஏடுகளையும், மூலிகை, கலவம் முதலிய கருவிகளையும் கொண்டு இம்மருத்துவர் விளக்கம் அளித்தனர்.

பல்வேறு வாழ்க்கை முறைகளையும், மன்னர் குடிவழிகளையும், தேர்தல் முறைகளையும், சிறபமுறைகளையும், நாட்டுப்பிரிவு முறை போன்ற பலப்பல தொகை வகைகளைக் கொண்ட விளக்கப் படங்கள் கலைக்காட்சியில் நெறிப்பட அமைக்கப்பட்டிருந்தன.

மின் அலங்காரப் போட்டி, தனியார் கட்டிட அலங்காரப் போட்டி முதலியவற்றில் வெற்றி பெற்றோர்க்கு கலைஞர் கருணாநிதி பரிசு வழங்கினார்.

பொதுவாக இக்கலைப் பொருட்காட்சி தமிழர்களின் தொன்மையையும், நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டு மேன்மையையும் உலகுக்கு உணர்த்துவதாக அமைந்திருந்தது.

கலைக்காட்சியியன் மற்றோரங்கமாக 'கையேடு' ஒன்றை இம்மாநாட்டினர் வெளியிட்டுள்ளனர். அளவிலும் பொருளிலும் பெரிதாக உள்ள இக்கையேட்டில் 94 கட்டுரைகளும், விளக்கப்படங்களும், வேறுபல படங்களும் தொகுத்து, வகுத்து அச்சிடப்பட்டுள்ளது.

கையேட்டில் தமிழரின் நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டு மேன்மையையும், கலைத் திறமையையும், பழக்க வழக்க உயர்வையும், தமிழ்மொழியின் அருமை பெருமைகளையும் சிறப்பாக விளக்கிக் காட்டும் கட்டுரைகளும், கவிதைகளும், ஓவியங்களும், நிழற் படங்களும் இடம் பெற்றிருக்கின்றன. மாண்புமிகு அண்ணாதுரை, கலைஞர் மு. கருணாநிதி, நாவலர் இரா. நெடுஞ்செழியன் ஆகியோரின் கருத்துரைகள் கையேட்டில் பொன் உரைகளாகத் திகழ்கின்றன.

இம்மாநாட்டில் பேரறிஞர் அண்ணா உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் ஒன்றினை ஏற்படுத்த வேண்டும் என அறிவித்தார். இம்மாநாடு நடைபெற்றதன் பின் உலகத்தமிழாராய்ச்சி மன்றம், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தை 1979 இல் தொடங்கியது. நிறுவனத்தின் முதல் தலைவராக நாவலர் நெடுஞ்செழியன் பொறுப்பேற்றார். பின்னர் இதனை நடத்தும் பொறுப்பினைத் தமிழக அரசிடமே மன்றம் ஒப்புவித்துவிட்டது. அன்றிலிருந்து தொடர்ந்து சிறப்பாகப் பணியாற்றிவரும் நிறுவனத்தில் இப்பொழுது கல்விஅமைச்சர் மாண்புமிகு க. பொன்னுசாமி தலைவராகவும், முனைவர் ச.சு. இராமர் இளங்கோ இயக்குநராகவும் உள்ளனர். இந்நிறுவனம் அயல்நாட்டினருக்குத் தமிழ் கற்பித்தல், மொழிபெயர்ப்பு, சுவடியியல் பயிற்சிகளை அளித்தல், ஆராய்ச்சி நூல்களைப் படைத்தல் முதலிய பணிகளை மேற்கொண்டுள்ளது.

திருக்குறள் ஆய்வுக்கான அறக்கட்டளை அமைப்பு அமைக்க வேண்டுமெனவும் இம்மாநாட்டில் பரிந்துரைக்கப்பட்டது. திருக்குறள் ஆராய்ச்சிக்காக மதுரை, அண்ணா, சென்னைப் பல்கலைக் கழகங்களுக்கு 9 லட்சம் ரூபாயை தமிழக அரசு வழங்கியிருக்கிறது.

எனவே இம்மாநாடு திருக்குறள் பிரிவுகளைத் தொடங்க வகை செய்தது எனலாம்.

## மேனாட்டறிஞர் கருத்து

இரண்டாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டிற்கு வெளிநாடுகளிலிருந்து பிரதிநிதிகளாகவும், பார்வையாளர்களாகவும் வந்துள்ளோர்க்குப் பொதுவில் இது ஓர் அரிய அனுபவமாகவே இருந்தது. அவர்கள் உலகமென்பது பெரிய குடும்பம் என்ற உணர்வுடன் தத்தமது தாயகங்களுக்குத் திரும்பும்போது மாநாட்டில் கலந்து கொண்டதன் வழி தங்களுக்கு ஏற்பட்ட எண்ணங்களை வெளிப்படுத்தினர்.

எவ்வளவு அருமையான மொழி தமிழ்மொழி என்பது வெளிநாட்டார் பலரின் ஒருமித்த கருத்தாக அமைந்தது.

கனடாவின் பிரிட்டிஷ் கொலம்பியப் பல்கலைக் கழக மானிடவியல் இணைப் பேராசிரியரான டாக்டர் எம்.எம். அமஸ் என்பவர், "மக்களும் தமிழக அரசும் ஒரே மனத்தினராயிருக்கின்றனர்; இதுதான் "தமிழ் மாநாட்டின் மீது இத்தனை அகத்தூண்டுதலை அளிக்கின்றது; தமிழ் பேசும் மக்களைப் பொறுத்தவரையில் மக்கள் அரசு – சனநாயகம் நிச்சயமாக இருக்கும்" என்று கூறினார்.

பாரீசிலுள்ள கீழைமொழிக் கூடத்தின் பேராசிரியரான பால் ஆல்பட் என்பவர், " நான் இத்தமிழாராய்ச்சி மாநாட்டில் இரண்டாவது முறை கலந்து கொண்டதிலிருந்து, நாமனைவரும் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் நாம் இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை கூடுவதற்கு ஒப்பியிருக்கிறோம் என்பன உறுதியாயின. ஒருவரிடமிருந்து மற்றவர் பெரிதும் வேறுபட்டிருக்கக் கூடிய மக்கள் ஒருவரையொருவர் புரிந்து கொள்ளவும் நட்புப் பாராட்டவும் இதைத் தவிர வேறுவழி இருப்பதாகத் தெரியவில்லை" என்று தெரிவித்தார்.

வேல்சிலுள்ள (பிரிட்டன்) காட்ரிஃப் பல்கலைக் கழகத்தின் வேல்ஷ் மொழி விரிவுரையாளரான செல்வி சீன் வென் எச்.

தாமஸ் என்பவர், "ஆங்கிலம் போன்ற உலகப் புகழ்பெற்ற மொழியின் நடுவே வேல்சின் மக்கள் நமது மொழியை மேம்படுத்தக் கொண்டுள்ள ஆர்வத்திற்கும், இந்நாட்டில் பரந்த மாறுதல் உண்டாகி வருகிற போதிலும் தமது பண்பாட்டை வளப்படுத்தத் தமிழ்மக்கள் கொண்டுள்ள ஊக்கத்திற்குமிடையிலுள்ள ஒற்றுமை எனது உள்ளத்தைத் தொட்டுவிட்டது. நம்மிருவருக்கும் மாபெரும் எதிர்காலமிருக்கிறது என்ற நம்பிக்கையை மீண்டும் துளிர்க்கச் செய்து கொண்டு நான் திரும்புகிறேன்" எனப் பகர்ந்தார்.

மாஸ்கோ பல்கலைக்கழகத்தின் பொருளியல் புவியியல் பேராசிரியரான டாக்டர் பால்ஜார்க்கின் என்பவர், "ஒரு மொழியை மேம்படுத்தப் பாமரமக்கள் இவ்வாறு கிளர்ந்தெழுந்ததை நான் கண்டதேயில்லை. இந்தியா இருபதாண்டுகளில் நீண்ட எட்டுக்களை வைத்திருக்கிறது; ஆனால் பண்பாட்டு மறுமலர்ச்சி இந்தியாவில் உண்டாகிறது என்பதை பாமர மக்களின் எழுச்சி காட்டுகிறது. மொழியைக் குறித்துப் பாமர மக்கள் இவ்வாறு பேரளவில் ஆர்வம் காட்டுவதை ஐரோப்பாவில் வேறெங்கும் கண்டதில்லை" என்றார்.

பின்லாந்து ஹெலிசிங்கி பல்கலைக் கழக மொழி ஒப்பியல் துறைப் பேராசிரியரான டாக்டர் பெண்டி ஆல்தோ என்பவர், "பாமரனான குடியானவனும்கூட இங்கு அரசியல் உணர்வு படைத்தவனாயிருக்கிறான். அவனுக்குத் தனது எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கையிருக்கிறது. இதுதான் தமிழ்மக்களிடத்தில் காணப்படும் தனிச் சிறப்பாயிருக்கிறது" என நவின்றார்.

தமிழின் தொன்மை மீதும், வளஞ்செறிந்த மரபின் மீதும், இதர இனத்தவர் ஆழ்ந்த ஆர்வம் காட்டியதால் இம்மாநாடு பெரிதும் வெற்றியாக நிறைவெய்தியது.

## 1.6.3. மூன்றாம் உலகத் தமிழ் மாநாடு – 1970

15–18 ஜூலை 1970 இல் பாரீஸ் நகரத்தில் 'காலேஜ் டிபிரான்ஸ்' என்ற கல்லூரியில் மூன்றாம் உலகத் தமிழ்மாநாடு நடந்தது. பிரெஞ்சுக் கல்லூரிப் பேராசிரியர் ஜூன் பில்லியோசர் (Jean Fillio Zar) தலைமையில் இம்மாநாடு நடைபெற்றது.

## பிரெஞ்சு

மேற்கு ஐரோப்பாவின் பெரிய நாடாகிய பிரெஞ்சு, ஸ்பெயின், ஜெர்மனி, இத்தாலி ஆகிய மூன்று நாடுகளுக்கு இடையில் அமைந்துள்ளது. முன்னர் முடியாட்சி நாடாயிருந்து பிரெஞ்சு புரட்சிக்கு பின் (1789 – 1793) குடியாட்சி நாடாயிற்று அதன்பின் குடியரசாகவும், முடியாட்சி நாடாகவும் ஒன்றன்பின் ஒன்றாக ஐந்தாவது குடியரசு வரை அமைந்தது. 1958இல் ஜனாதிபதி சார்லஸ் டி–கால் என்பவரின் கீழ் பிரெஞ்சு சமுதாயம் ஒன்றிணைந்தது. கடந்த 20 ஆண்டுகளில் ஏற்பட்ட நகர வளர்ச்சியும், அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சியும், ஆழ்ந்த அறிவு சார்ந்த முன்னேற்றத்தைப் பிரெஞ்சு மக்களுக்கு அளித்துள்ளன.

இந்நாட்டுத் தலைநகர் பாரீஸ், பரப்பளவு – 5, 4, 7, 026 ச.சி.மீ. மக்கள் தொகை –5,7,2,00,000. மொழி பிரெஞ்சு மற்றும் வட்டா வழக்குகள். எழுத்தறிவு 99 விழுக்காடுகள். சமயம் : கிருத்துவம், நாணயம் : பிராங்க் (ஒரு டாலர் = 5.59 பிராங்கு). தனிநபர் வருமானம் : 19,490 டாலர்கள். தமிழ் பேசுவோர் ஓர் இலட்சம் பேரினர்.

## தொடக்க விழா

டாக்டர் கலைஞர் கருணாநிதி மாநாட்டைத் தொடங்கி வைத்து உரையாற்றினார். அவர் "உலகின் பல்வேறு நாடுகளில் தமிழைப் பரப்பவும், தமிழ் நாட்டுக்கும், பிற நாடுகளுக்குமிடையே மாணவர் பரிவர்த்தனைக்கு ஏற்பாடு செய்யவும், தமிழை நவீன மொழியாக்கவும் மாநாட்டினர் கவனம் செலுத்த வேண்டும்" என்று கூறினார். மேலும் அவர் "தமிழ் ஆங்கிலப் பேரகராதி ஒன்றைத் தயாரித்து வெளியிட தமிழறிஞர்கள் முன் வரவேண்டும் ; தமிழ் உலகப் பொது மொழியாக ஏற்றுக் கொள்ளத் தக்க ஒரு திசையை நோக்கி ஆராய்ச்சி இருக்க வேண்டும்" என்றும் கூறினார்.

யுனெஸ்கோ தற்காலிகத் தலைமை இயக்குநர் டாக்டர் மால்கம் ஆதிசேசையா, தமிழ்நாடு நிதியமைச்சர் கே.ஏ. மதியழகன் மற்றும்

பலர் பேசினர். இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் அறிக்கையை திரு. சுப்பையா தந்தார்.

தமிழின் சிறப்பை, வளர்ச்சி நிலையை உணர்ந்து வெளிநாட்டவரும் தமிழ் ஆய்வுகளில் ஈடுபட வேண்டும் என்பதைக் கருப்பொருளாகக் கொண்டு மாநாடு அமைந்தது. மாநாட்டில் 39 நாடுகளைச் சேர்ந்த சுமார் 200 பிரதிநிதிகள் பங்கேற்றுச் சிறப்பித்தனர். தமிழகத்திலிருந்து 18 பேர் கொண்ட குழு ஒன்று அம்மாநாட்டிலே கலந்து கொண்டது. தமிழ்மொழிஇயல் ஆராய்ச்சிப் பணிகளை ஊக்குவிப்பதற்காகத் தோன்றியதும், யுனஸ்கோ உதவி பெற்றதுமான உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் ஓர் உயர் பணியாகவே இம்மாநாடு நடத்தப் பெற்றது. இந்திய மொழி ஆராய்ச்சி தொடர்பாக, மேற்கு நாடு ஒன்றிலே உலகத் தமிழ் மாநாடு கூடியது இதுவே முதன் முறையாகும்.

## கருத்தரங்கு

120 பேராளர்களும் 60 பார்வையாளர்களும் கருத்தரங்கில் கலந்து கொண்டனர். கருத்தரங்கில் கட்டுரை படித்தவர்களின் கட்டுரைகள் மட்டுமே நூலில் இடம் பெற்றுள்ளன. ஆங்கில மொழியும் பிரெஞ்சு மொழியும் கருத்தரங்கில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டது. ஒரு சில பேராளர்கள் மட்டுமே தமிழைப் பயன்படுத்தியிருக்கின்றனர். நூலின் அனைத்துக் கட்டுரைகளும் ஆங்கிலத்திலேயே இடம் பெற்றுள்ளன. ஏழு அமர்வுகளின் 24 கட்டுரைகள் நூலில் இடம் பெற்றுள்ளன. இறுதியில் 'அமர்வின் இறுதியறிக்கை (Concluding Session Summary)' இடம் பெற்றுள்ளது. இந்நூல் 271 பக்கங்களைக் கொண்டுள்ளது.

## 3ஆம் உலகத் தமிழ் மாநாடு பிரெஞ்சில் நடைபெறக் காரணம் :

பிரெஞ்சு நாகரீகத்துக்கும், தமிழ்க் கலாச்சாரத்திற்கும் பழமையான தொடர்பு இருந்து வந்துள்ளது. மேலும் 1772இல் தமிழ்ப் பண்பாடு பிரெஞ்சு முதலிய ஐரோப்பிய அறிஞர்களிடையே வெளிப்படக் காரணமாயிருந்தவர் மரியதாஸ்

பிள்ளை. 1828இல் பிரெஞ்சுக் கல்லூரியில் 'திராவிட மொழிகளின் ஆய்வு' இடம் பெற்றதால் தமிழ் அறிஞர்களும் இக்கல்லூரியில் இடம் பெற்றனர். எனவே இக்கல்லூரி 200 ஆண்டுகளாக தமிழோடு தொடர்பு உடையதாக இருந்திருக்கிறது. தமிழின் பிற்கால வளர்ச்சியினை ஐரோப்பிய அறிஞர்கட்கு உணர்த்தவும், மேற்கத்திய நாடுகளோடு தமிழுக்குள்ள தொடர்பினை விளக்கும் பொருட்டும் இங்கு நடந்திருக்கின்றது.

இரண்டாம் மாநாட்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடங்கலாம் என அண்ணா அவர்களின் முயற்சியால் முடிவு செய்யப்பெற்றது. 3ஆம் மாநாட்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை எப்படி அமைக்கலாம் என்பதற்கான பரிந்துரைகளும், இதனை நிறுவ யுனேஸ்கோ உதவி பெறுவதற்கான திட்டமும் நிறைவேற்றப்பட்டது.

### கண்காட்சி

பிரெஞ்சிலுள்ள அரிய தமிழ்ப் புத்தகங்களும், அரிய தமிழ்ச் சுவடிகளும், புத்தகக் கண்காட்சியில் இடம் பெற்றன.

### கலை நிகழ்ச்சிகள்

தென்னிந்தியக் கலாச்சாரத்தின் சின்னங்களான கட்டடக் கலைகளும் மற்றும் சிற்பம், சித்திரம் போன்ற எழிற் கலைகளும் இங்கு தகுந்த இடம் பெற்றன. சேலம் ஜெயலட்சுமியின் பக்திப் பாடல்களும், செல்வி பத்மா சுப்பிரமணியம் (தமிழ்நாடு) வள்ளி சச்சிதானந்தம் (இலங்கை) ஆகியோரின் பரத நர்ட்டியமும். கிவ. ஜகநாதனின் வெண்பாப் பாடல்களும் இடம் பெற்றன.

நிதியமைச்சர் எம். மதியழகன், பாண்டிச்சேரி முதல் அமைச்சர், மு. வரதராசனார், துணை வேந்தர் நெ.து. சுந்தர வடிவேலு. முதலியோர் மாநாட்டில் கலந்து கொண்டனர். கடந்த நூற்றாண்டுகளில் தமிழர்களுக்கும் தமிழ் நாட்டிற்கும் பிரெஞ்சு பண்பாடு அறிமுகமானது என்பதை இம்மாநாடு அறிவுறுத்துகிறது. உலகத் தமிழ் மாநாட்டிற்கு வருகை தந்த ஹவாய்ப் பேராசிரியர் ஜென்னர், "தென் கிழக்காகிய வரலாற்றில் நுண்ணறிவு பெற இங்கு வந்தேன்" என்று கூறுகிறார்.

## 1.6.4. நான்காவது உலகத் தமிழ் மாநாடு – 1974.

3.1.74 முதல் 9.1.74 வரை 4–ஆம் உலகத் தமிழ் மாநாடு இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத்தில் நடைபெற்றது.

### இலங்கை

தென்னகத்தில் வாழும் தமிழர்கள் பலருக்கு, இலங்கை, ஈழம் என்றால் யாழ்ப்பாணம் என்னும் பட்டணம் மட்டுமே தெரியும். ஆனால் யாழ்ப்பாணத்துக்கு அப்பால் மட்டக்களப்பு, திருகோணமலை போன்ற நகரங்களிலும் பெருவாரியான தமிழர்கள் வாழ்கின்றனர். இத்தமிழர் மான உணர்ச்சியும், இன உணர்ச்சியும் உள்ளவர்கள். முத்தமிழ் வித்தகர் விபுலானந்த அடிகள் பிறந்ததும்மட்டக்களப்பு மண்ணிலே.

இலங்கைக்கு, பிரிட்டன் 1948–இல் சுதந்திரம் வழங்கியது. தமிழ் வம்சாவளியினர் தனிநாடு கேட்டுப் போராடி வருகின்றனர். நாட்டில் நடைபெற்ற பெரும் கலவரங்களை அடுத்து 1977–இல் சிரிமாவோ பண்டார நாயகாவின் ஆட்சி பதவியிழந்தது. இங்கு நாட்டின் அதிபரை மக்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கின்றனர். 168 உறுப்பினர் கொண்ட ஒற்றைப் பாராளுமன்றம் உடையது. அதிபரே அமைச்சரவையின் தலைவராகவும் இருக்கிறார். நிர்வாக வசதிக்காக இலங்கை 28 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இதன் தலைநகர் கொழும்பு. பரப்பளவு 65610 ச.கி.மி. மக்கள் தொகை 17.7 கோடி (1992). மொழி : சிங்களம், தமிழ் மற்றும் ஆங்கிலம். சமயம் : புத்தம், இந்து, கிருத்தவம் மற்றும் இஸ்லாம். நாணயம் : ருப்பி (46.26–1 டாலர்). தனி நபரின் வருமானம் 470 டாலர். இலங்கையில் தமிழ் பேசுவோர் எண்ணிக்கை 38,00,000 (38 இலட்சம்).

### தொடக்கவிழா

யாழ்ப்பாணம் வீரசிங்கம் மண்டபத்தில் தொடங்கப்பெற்ற இவ்விழாவிற்கு உலகத் தமிழ்ஆராய்ச்சி மன்ற இலங்கைக் கிளையின் தலைவர் பேராசிரியர் சு. வித்தியானந்தன் தலைமை

தாங்கி தலைமையுரை நிகழ்த்தினார். அப்பொழுது அவர், "இவ்வாராய்ச்சி மாநாடு இங்கு நடைபெறுவதற்கேற்ற தகுதியும், உரிமையும் மட்டக்களப்புக்கே உண்டு. ஈழமண்டலத்திலே, பல கண்ணகி அம்மன் கோயில்கள் அமைந்திருக்கின்றன. அதுவும் மட்டக்களப்புப் பிரதேசத்திலே ஒவ்வோர் ஊரிலும் கண்ணகி அம்மன் கோயிலுண்டு. இக் கோயில்களிற் படிக்கப்படும் காவியமே கண்ணகி வழக்குரை. கோவலன் கொலை, தனிமனிதனின் கொலையன்று, அது இனக்கொலை; தனி மனிதனை விசாரியாது தண்டிக்கும் எந்த அரசும் வேரொடு அழிக்கப்படவேண்டும். இந்த அரசியல் ஞானத்தை மட்டக்களப்பு மக்கள் ஒவ்வோர் ஆண்டும் வைகாசி விசாகத்தில் உலகிற்கு உபதேசிக்கின்றனர். இத்தகைய தன்மானக் கொள்கையையுடைய மக்களின் தலைநகரிலே ஆராய்ச்சி மாநாடு நடைபெறுவது பொருத்தமானது; ஏற்றமானது என்பதை உண்மைத் தமிழ் பேசும் மக்களின் பாரம்பரியத்தையும் தமிழ்த் தொண்டையும் அறிந்த எவரும் மறுக்க முடியாது" என்று கூறினார்.

தவத்திரு தனிநாயகம் தொடக்கவுரையும், புலவர் மணி – ஏ. பெரிய தம்பிப்பிள்ளை சிறப்புரையும் நிகழத்தினர்.

## கருத்தரங்கு

ஆய்வு மாநாடு பொதுக் கருத்தரங்கு, ஆய்வுக் குழுக் கருத்தரங்கு என இரு பிரிவாகப் பிரிந்து ஜனவரி 3–ஆம் நாள் பிற்பகலிலிருந்து 8ஆம் நாள் வரை நடைபெற்றது. பொதுக்கருத்து வீரசிங்க மண்டபத்தில் நடைபெற்றது. றிம்மர் மண்டபத்தில் (Trimmer Hall) நான்கு பகுதிகளாக ஆய்வுக்குழுக் கூட்டங்கள் நடைபெற்றன. சமுதாயம், இலக்கியம், மதம் மெய்ப்பொருள், மொழியியல், அறிவியல் நுட்பவியல், தொல்லியல் மானுடவியல் ஆகிய தலைப்புகளில் ஆய்வுக் குழுக்கள் நடைபெற்றன. சுமார் 120 கட்டுரைகள் வரப் பெற்றன. 70–க்கும் மேற்பட்டக் கட்டுரைகள் படித்து ஆராயப்பெற்றன. படிக்கப்பட்ட 115 கட்டுரைகளில் 45 கட்டுரைகள் ஈழத்தின் மொழி, இலக்கியம், கலை, சமூக இயல் போன்றவை பற்றி அமைந்திருந்தமை சிறப்பாகக்

குறிப்பிடற்குரியது. பல்வேறு வகைகளில் ஈழத்திலுள்ள ஏனைய பகுதிகளைவிட மட்டக்களப்புக்கும் தென்னிந்தியாவுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை இக்கட்டுரைகள் துல்லியமாகக் காட்டுகின்றன.

'மட்டக்களப்புத் தமிழே மிகவும் செந்தமிழ்ப் பண்புடையதென்று' 1966-ஆம் ஆண்டு அறிஞர் கமில் சுவலபில் கூறியது இங்கு எண்ணத் தக்கது.

இம் மாநாட்டில் வழங்கப்பெற்ற கட்டுரைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டிருப்பதாக முதல் தொகுதியில் குறிப்புக் கிடைக்கின்றது. ஆனால் முதல், இரண்டு தொகுதிகள் கிடைக்கப் பெற்று 3-ஆம் தொகுதி கிடைக்கப் பெறவில்லை. முதலாந் தொகுதியிலுள்ள கட்டுரைகள், இலக்கியம், சமுதாயம், மொழியியல், சமயம் ஆகிய துறைகளைப் பற்றியவை. இத்தொகுதி தமிழில் அமைந்துள்ளது. இரண்டாம் தொகுதியில் பெரும்பாலும் ஈழத்தமிழகம் பற்றிய கட்டுரைகள் இடம் பெறுகின்றன. மூன்றாந் தொகுதியிலே இந்தியத் தமிழகத்தைப் பற்றிய கட்டுரைகள் அடங்குகின்றன. பின் இரண்டு தொகுதிகள் ஆங்கிலத்தில் அமைகின்றன. முதல் தொகுதியில் 30 கட்டுரைகளும் இரண்டாம் தொகுதியில் 25 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.

## காவியங்களும்—கவிதை நாடகங்களும்

தனிக் கவிதைகள் பலவற்றை எழுதிய நீலாவணன், 'பட்டமரம்', 'வேளாண்மை' என்னும் காவியங்களையும், 'மழைக்கை', 'சிலம்பு', 'மனக்கண்' ஆகிய கவிதை நாடகங்களையும் எழுதியுள்ளார்.

## கலை நிகழ்ச்சிகள்

வீரசிங்கம் மண்டபம், திறந்த வெளியரங்கு, சுண்டிக்குளி மகளிர் கல்லூரி ஆகிய மூன்று இடங்களிலும் நாள்தோறும் இரவில் கலைநிகழ்ச்சிகள் இடம்பெற்றன. நாட்டியாஞ்சலி, உழவர் நடனம், புரவியாட்டம், காவடி, கரகம், பரதநாட்டியம், குச்சுப்பிடி முதலிய நடன நிகழ்ச்சிகளும், பண்ணிசை, வீணை இசை முதலிய இசை

நிகழ்ச்சிகளும் நாடகங்களும் பொது மக்களுக்கும் வெளிநாட்டினருக்கும் விருந்தாக அளிக்கப்பெற்றன. கலை நிகழ்ச்சிகளை துரைராசா என்ற கட்டிடக் கலைஞர் ஏற்பாடு செய்திருந்தார். கலைநிகழ்ச்சியில் பங்கு பெற்றவர்களுக்கு பாராட்டுப் பத்திரங்கள் வழங்கப்பட்டன. ஈழத்தமிழர் வரலாற்றினையும் சில இலக்கியச் செய்திகளையும் நேரில் நடத்திக் காட்டியமை சிறப்பம்சமாக அமைந்தது.

## அலங்கார ஊர்திகள்

சங்கிலி மன்னன் காலத்துத் தோரண வாயிலிலிருந்து அலங்கார ஊர்திகள் புறப்பட்டு, யாழ்ப்பாணத்துப் பெருந்தெருக்களிலே உலா வந்தன. ஈழத்தை ஆண்ட மன்னர்கள், புலவர்கள், வள்ளல்கள் ஊர்திகளில் இடம் பெற்றனர். அறிஞர் அண்ணாவின் படம் கொண்ட ஊர்தி ஒன்றும் இடம் பெற்றது வல்வெட்டுத் துறையிலிருந்து அமெரிக்கா சென்ற பாய்மரக் கப்பலின் மாதிரி ஒன்றும் இடம் பெற்றது. ஈழ நாட்டுப் புலவர்களின் படங்களைக் கொண்ட ஊர்திகள், ஈழ நாட்டின் அரசியல், தொழிலியல், வாணிபம் முதலியன பற்றிய காட்சிகள் உலாவில் இடம் பெற்றன.

## பொருட்காட்சி

சுண்டிக்குளி மகளிர் கல்லூரியில் நடைபெற்ற பொருட்காட்சியை ஜனவரி 4-ஆம் நாள் யாழ்ப்பாண அரசாங்க அதிபர் விமல் அமரசேகரா திறந்து வைத்தார். ஈழத்துச் சிறப்புகள் அனைத்தையும் ஒன்றாகக் காட்டிய இப் பொருட்காட்சி 8-ஆம் நாள் வரை நடைபெற்றது. ஈழம் வாழ் தமிழ் பேசும் மக்களின் வரலாறு, மொழி, இலக்கியம், கலைகள், கைத்தொழில்கள். தொல் பொருளியல், அறிவியல் எனப் பல்வேறு துறைகளை விளக்கிக் காட்டியது இப்பொருட்காட்சி; பனைப் பொருட்கள், பட்டுத்தொழில்கள் முதலியன காட்சியில் இடம் பெற்றன. ஈழத்துச் சித்த வைத்திய ஏட்டுச் சுவடிகளும், திரு. சி. கனகரத்தினம் அமைத்திருந்த வரலாறு பற்றிய பொருட்காட்சியும் பலரின்

கவனத்தைக் கவர்ந்தன. தொல்லியல் துறையைச் சார்ந்த கலாநிதி பத்மநாபன் மேற்பார்வையில் இப்பொருட்காட்சி திறம்பட அமைக்கப்பட்டிருந்தது.

**பயன்**

வட்டார வழியாக இதுவே முதல் தடவையாக நடந்த மாநாடு. மாவட்ட வழியில் மட்டக்களப்பில் தமிழாராய்ச்சி நடத்தியதும் இதுவே முதல் தடவை. மட்டக்களப்பு மண்ணும் இதனால் பெருமை அடைந்துள்ளது. உலகத் தமிழர் மத்தியில் இது ஓர் இடம் தனக்கென்று பிடித்துக் கொண்டது. தென்னிந்தியாவிலிருந்து தமிழர் மட்டக்களப்புக்குக் குடியேறினர் என்ற கருத்தும் உண்டு.

அடுத்த மாநாடு மதுரையில் நடத்துவதாகப் பரிந்துரைக்கப்பட்டது. வெளிநாட்டு அறிஞர்களுக்கு குத்துவிளக்கு, தாம்பாளம், கை விசிறி, ஓலைப்பெட்டி பரிசாக அளிக்கப்பட்டன. மாநாட்டின் வெற்றிக்கு உழைத்த பலருள், திருமதி. புனிதம் திருச்செல்வம், திருமதி. மகேசுவரி பாலகிருஷ்ணன், திருமதி. எம். அருணாசலம், திருமதி. சபாரத்னம் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்த பேரின்ப நாயகம் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

## 1.6.5. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு – 1981

1981 சனவரி ஒன்று முதல் 10 வரை மதுரை மாநகரில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு தமிழக முதல்வர் டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன் தலைமையில் நடைபெற்றது. இம் மாநாட்டை நடத்தும் பொறுப்பை ஏ. சுப்பையா அவர்களின் தலைமையின்கீழமைந்த உலகத் தமிழாராய்ச்சி மன்றம் ஏற்றது.

**மதுரை**

இது புராண வரலாற்றுச் சிறப்புடையது. பாண்டியர்களின் தலை நகராய்ச் சிறப்பு பெற்றிருந்தது. குலசேகர பாண்டியர் காலத்தில், இன்றுள்ள மதுரை மாநகரின் அடிப்படை அமைப்பு

உருவாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. 1786இல் மதுரை மாவட்டமாக உருவானது.

இதன் அமைவிடமாக மேற்கில் கேரள மாநிலத்தையும், கிழக்கில் பசும்பொன் தேவர் திருமகனார் மாவட்டத்தையும், வடக்கில் திண்டுக்கல் அண்ணா மாவட்டத்தையும், தெற்கில் காமராசர் மாவட்டத்தையும் தமது எல்லைகளாகக் கொண்டு அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் தலைநகரம் மதுரை. இதன் பரப்பு 7057.3. ச.கி.மீ. இங்கு வாழும் மக்கள் தொகை 3449662. இதில் ஆண்கள் 1756351. பெண்கள் 1693311. வளர்ச்சி நெருக்கம் ச.கி.மீக்கு 525 பேர்கள். ஆண், பெண் விகிதம் 1000 ஆண்டுகளுக்கு 972. இது சங்கம் வைத்து தமிழ் வளர்த்த மதுரை மூதூர் என்ற சிறப்புப் பொருந்திய பெருமை உடையது.

## தொடக்கவிழா

மதுரை பந்தயத்திடலில் அமைந்திருந்த வள்ளுவர் அரங்கில் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனின் நாதஸ்வர இசையுடன் மாநாடு தொடங்கியது. மாநாட்டின் தலைமை ஒருங்கிணைப்பாளர் க. திரவியம் மாநாடு தொடங்குவதாக அறிவித்தார். தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலை கலைமாமணி சீர்காழி கோவிந்தராஜன் பாடினார். தமிழக அரசின் சார்பில் மாண்புமிகு அமைச்சர் ஆர்.எம். வீரப்பன் அவர்களும் மன்றத்தின் சார்பில் முன்னாள் நீதிபதி திரு. எஸ். மகாராஜனும் வரவேற்புரை ஆற்றினர்.

அதன் பின் ஆளுநர் சாதிக் அலி மாநாட்டைத் தொடங்கி வைத்து உரைநிகழ்த்தினார். ஆளுநர் உரைக்குப் பின் கேரள முதல்வர் திரு நாயனார், துணை அமைச்சர் வி. சாமிநாதன், முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம், திருவாளர்கள் பிரான்சிஸ் ரயான், ஜெகத்சிங், ராஜதுறை, தொண்டைமான், அமிர்தலிங்கம், பக்கீர்மரக்காயர், டேவிட், டாக்டர் ஆஷர், சி. சுப்பிரமணியம், எஸ். எ. ராஜா, டாக்டர் ஜெனார்ட், டி. என். உப்பாரெட்டி, ஜோசப் செல்வராசு, வை. பாலசுந்தரம், செய்குதம்பி பாவலர், குருவாருர்

தங்கராசு, திரு இஸ்மாயில், நெடுமாறன், குமரிஅனந்தன், அறவாணன், சங்கரய்யா, ப.உ. சண்முகம், ம.பொ.சி. ஆகியோர் உரை நிகழ்த்தினர். மாநாட்டு நிகழ்ச்சிகளைத் திரு. வி. எஸ். துரைராஜா தமது சொந்தச்செலவில் திரைப்படமாக அமைத்துள்ளார்.

## கருத்தரங்கு

இம் மாநாட்டில் 40 நாடுகளிலிருந்து 800 பேராளர்கள் கலந்து கொண்டனர். இவர்களுள் 400 வெளிநாட்டறிஞர் என்பது குறிப்பிடத்தக்கது. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் 5–1–1981 முதல் 10–1–1981 முடிய கருத்தரங்கு நடைபெற்றது.

தமிழறிஞர் அனைவரும் ஒன்று கூடி ஆய்வு நிகழ்த்தும் அம்பலக் கருத்தரங்கில் (Plenary Session) அனைவர்க்கும் பொதுவான தற்கால ஆய்வுகள், உச்ச நிலை பற்றிய ஆய்வுகள் இடம் பெற்றன. இக்கருத்தரங்கில் மாநாட்டில் கலந்து கொண்ட அறிஞர் பார்வையாளர்களாகக் கலந்து கொண்டனர். அம்பலக்கருத்தரங்குகள் ஆறு இம் மாட்டில் இடம் பெற்றன.

அறைக் கருத்தரங்குகளில் (Group discussion) குறிப்பிட்ட ஆய்வுப் பகுதிகள் அத்துறையில் வல்ல ஒருவரின் தலைமையின் கீழ் நடைபெற்றது. அறிஞர்களின் கட்டுரைகள் அவற்றின் தன்மைக் கேற்ப இவ்விரு பகுதிகளுள் ஒன்றில் இடம் பெற்றன. அறைக் கருத்தரங்கு ஒரே நேரத்தில் 12 இடங்களில் நடைபெற்றன. ஐந்து நாட்களில் 60 இடங்களில் இக் கருத்தரங்குகள் நடைபெற்றன.

8–1–81 அன்று நடைபெற்ற ஆய்வுக் கருத்தரங்கினைக் காண வந்த முதல்வர் வாழ்த்துரை வழங்கினார். அப்போது அவர் இங்கே கூடியுள்ள அறிஞர் பெருமக்கள் தங்கள் உள்ளத்தில் உருவாகியுள்ள கருத்துகளை வெளிப்படுத்தி தமிழ்மொழி வளரவும், எதிர் காலத்தில் தமிழகம் நன்மை பெறவும் உறுதுணையாக இருக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். மேலும் அவர் மொரிசியயசு தீவு மக்கள் தமிழ்

படிக்க வசதிசெய்வதற்காக இங்கிருந்து தமிழாசிரியர்களை (மத்திய அரசின் அனுமதிகிடைத்ததும்) அனுப்புவதற்கான உத்தரவில் கையெழுத்திட்டிருப்பதாகக் கூறினார்.

மாநாட்டில் படிக்கப்பட்ட இவ்வாய்வுக் கட்டுரைகளின் 'கருத்தரங்கத் தொகுதிகள்' 1981 செப்டம்பரில் நூலாக வெளி வந்தன. இந்நூல் வெளிவருவதற்கு முன்னரே மாநாட்டை நடத்தும் பொறுப்பு வகித்த சுப்பையா காலமாகி விட்டதால் நூலில் இவரது மறைவு நினைவு கூரப்பட்டுள்ளது. கருத்தரங்கத் தொகுதிகள் மூன்றில் முதலிரண்டு தொகுதிகள் ஆங்கிலக்கட்டுரை களடங்கியவை. மூன்றாந்தொகுதி தமிழ்க் கட்டுரைகளடங்கியவை. இத்தொகுதிகள் 3000 பக்கங்களைக் கொண்டுள்ளன. முதல் தொகுதியில் 100 கட்டுரைகளும் இரண்டாம் தொகுதியில் 86 கட்டுரைகளும் மூன்றாம் தொகுதியில்' 67 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. முதல் இரு தொகுதிகளில் 18 அமர்வுகளின் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

## பொதுநிலைக் கருத்தரங்கு

மூவேந்தர் அரங்கில் பொது நிலைக் கருத்தரங்குகள் நடைபெற்றன. ஐந்து கருத்தரங்குகள், மூன்று கவியரங்குகள், இரண்டு வழக்காடு மன்றங்கள், இரண்டு பட்டிமன்றங்கள், முதலிய இலக்கிய நிகழ்ச்சிகள் அனைத்தும் சிறப்புற அமைந்திருந்தன. 'காப்பிய உலகக் கலைநலம், 'சங்க இலக்கியச் சால்பு', 'திருக்குறள் கருத்தரங்கம் எனும் பொருள்களில் கருத்தரங்குகள் அமைந்தன.

7-1-81 மூன்றாம் நாள் நிகழ்ச்சியாக 'புலவர் குழு அமர்வு' நிகழ்த்தப்பெற்றது. 1958 இல் தமிழ்நாட்டில் அமைக்கப்பட்ட 49 புலவர்களைக் கொண்ட இக்குழ 27ஆயிரம் தமிழாசிரியர்களின் பிரதிநிதிகளேயாகும். திருப்பரம்புரம் சகோதரர்கள் நாயன இசையோடு தொடங்கிய இந்நிகழ்ச்சியில் திரு. ஔவை நடராசன் வரவேற்புரையாற்றினார். கோவை இளஞ்சேரன் புலவர் குழுவினர் 49 பேர்களையும் அறிமுகம் செய்து வைத்தார்.

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் தொடக்கவுரை யாற்றினார். நாவலர் நெடுஞ்செழியன் பாராட்டுரை நல்கினார்.

முதல்வர். எம். ஜி. ஆர் புலவர் குழுவினர் அனைவருக்கும் பட்டாடை அணிவித்து, தஞ்சாவூர்த் தட்டுவழங்கிச் சிறப்பித்தார்.

'தலையாய தமிழுக்கு நிலையாய மகுடங்கள்' என்ற தலைப்பிலான கவிதைப் போட்டியில் வென்றவர்களுக்கு 9-1-81 மீனாட்சியம்மன் கோவிலில் பொற்கிழி பரிசளிப்பு விழா நடைபெற்றது. அவ்வகையில் முதல் பரிசு பெற்ற திரு. சோ. மீ. சுந்தரத்திற்கு ரூ. 3001 முதல் பரிசாக வழங்கப்பட்டது. அருண் கீ தாயனுக்கும், பேராசிரியர் துரைசாமிக்கும் முறையே 751ம் 501ம் பொற்கிழி அளிக்கப்பட்டன.

## சிலைத்திறப்பு

மாநாட்டை முன்னிட்டு 5-1-81 அன்று தொல்காப்பியர், திருவள்ளுவர், பாண்டித்துரைத்தேவர், ராபர்ட்டி நோபிளி, வேதநாயகம் பிள்ளை, தனிநாயக அடிகள், ஆறுமுக நாவலர், திரு. வி. கல்யாணசுந்தரம், வீரமாமுனிவர், உ.வே. சாமிநாத அய்யர், தேசிக விநாயகம் பிள்ளை, சோமசுந்தர பாரதி ஆகிய பன்னிருவருக்கு சிலைகள் திறக்கப்பட்டன. (பார்க்க பின்னிணைப்பு)

## தோரண வாயில்கள்

பாண்டியன் தோரணவாயில், சோழன் தோரணவாயில், சேரன் தோரணவாயில், அங்கயற்கன்னி தோரணவாயில், நக்கீரர் தோரணவாயில் போன்றவை மாநாட்டின் நுழைவாயில்களாக அமைக்கப்பட்டன. கண்காட்சி முகப்பில் மூவேந்தர் நுழைவு வாயில் அமைக்கப்பட்டது. 50 அடி அகலம் 51 அடி உயரமுள்ள சோழன் தோரணவாயில் அனைத்துத் தோரணவாயில்களையும் விடப் பெரிதாக இருந்தது.

அங்கயற்கன்னி நுழைவாயிலைத் திறந்து வைத்துப் பேசிய திருமதி சௌந்தரா கைலாசம், "அந்நாளில் மன்னர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் வருகைக்கு தோரணவாயில்கள்

அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் இந்நாளில் எல்லோரும் இந்நாட்டு மன்னர்களே என்பதால் அறிஞர் பெருமக்களை வரவேற்க மூவேந்தர் பெயர்களில் தோரண வாயில்களை அமைத்த விதம் சிறப்புக்குரியதாகும்" என்று கூறினார். (பார் பின்னிணைப்பு)

## ஊர்வலம்

28 அலங்கார இரதங்களைக் கொண்ட ஊர்வலம் உலா வந்தது. இவ்வுலா தமிழர் நாகரிகம், பண்பாடு, வரலாறு ஆகியவற்றை உள்ளடக்கியதாக அமைந்தது. வ.உ.சி. உ.வே.சா மற்றும் தற்காலக் கவிதை வளர்ச்சிக்கு, நாடக வளர்ச்சிக்குப் பாடுபட்டோர் முதலியோரின் உருவங்களும் ஊர்வலத்தில் இடம் பெற்றன. பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தத்தை விளக்கிக் காட்டும் இரத ஊர்வலம், கம்பனின் புகழ்மிக்க வரலாற்றின் ஒரு கூறை விளக்கும் இரதம், குறிஞ்சி நிலக்காட்சி, குற்றாலக்காட்சி, அகத்துறைக் காதலை விளக்கும் அருங்காட்சி, தேர் உலாக்காட்சி, அயல்நாட்டு வாணிகக் காட்சி, காளையை அடக்கிக் கன்னிகையைக் கைப்பிடிக்கும் காட்சி, பிட்டுக்கு மண் சுமந்த காட்சி போன்ற அரிய பல காட்சிகளைக் கொண்ட இரதங்கள் சரித்திரப் புகழ்பெற்ற மதுரை மூதூரில் வலம் வந்தன. மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் மாநாடு நடைபெற்ற சனவரி 4 முதல் 10–ஆம் நாள் வரை கலை நிகழ்ச்சிகள் பல நடத்தப்பட்டன.

## கண்காட்சி

5–1–91 அன்று தமுக்கம் மைதானத்தில் கண்காட்சியும், கண்காட்சி முகப்பில் அமைந்த மூவேந்தர் வாயில்களும் திறந்து வைக்கப்பட்டன. தமிழக முதல்வர் தலைமையில் கர்நாடக முதல்வர் குண்டுராவ் கண்காட்சியைத் திறந்து வைத்தார். மாநாட்டுக்கு எனத் தொடங்கப்பெற்ற இக்கண்காட்சி நான்கு மாதகாலம் இருந்தது என்பதைக் கொண்டு கண்காட்சி எத்தகு சிறப்புடனும், பயன்பாட்டுடனும், கலைநயத்துடனும் அமைந்திருக்கும் என்பதைத் தெற்றென உணரமுடிகின்றது.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" எனும் ஆழ்ந்த கருத்தைக் காட்ட உலக உருண்டையின் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு இயங்கும் காட்சி சித்தரிக்கப்பட்டிருந்தது. ஒலி – ஒளிக் கண்காட்சியில் திருமலைநாயக்கரின் வரலாற்றுப்பகுதி இடம் பெற்றது. தமிழக அரசு திரைப்படக் குழுவினரால் 'குமரிக்கண்டம்' என்னும் படம் தாயாரித்தது வரலாற்றுச் சிறப்புடையது.

கி.மு. 2000 முதல் கி.பி. 1931 வரையுள்ள தமிழர்தம் வாழ்வையும், வளர்ச்சிமிக்க நாகரிகப் பண்பாட்டையும் காட்டும் முகமாக வரலாற்றுக் கண்காட்சி அமைந்தது.

பேசும் எலும்புக்கூடு, தீக்குச்சியினால் எரியும் மின்விளக்கு, மின்சாரம் இல்லாமல் எரியும் விளக்கு, போன்ற அறிவியல் விநோதங்களுடன் 'அகில இந்திய சுற்றுலாவர்த்தகப் பொருட் காட்சி' ஒன்றும் அமைக்கப்பட்டிருந்தது. இதில் 103 அரங்குகள்; அவற்றுள் மாநில அரசுத்துறை 22, மாநில அரசு நிறுவனங்கள் – 19, மத்திய அரசுத் துறை நிறுவனங்கள் – 16, பிறமாநில அரசு நிறுவனங்கள் – 13, தனியார் துறை – 23, என்ற வகையில் அரங்குகளை அமைத்திருந்தன. இவை தவிர 205 கடைப்பகுதிகளும் கண்காட்சியில் இடம் பெற்றிருந்தன.

காவல்துறை, கல்வித்துறை தொல்பொருள்துறை, மருத்துவத்துறை தொழில்துறை தொடர்பான காட்சிகள் இக்கண்காட்சியில் இடம் பெற்றன. தமிழ்நாடு கனிமநிறுவனம், சிட்கோ, உப்புவாரியம், பூம்புகார் முதலிய நிறுவனங்களின் அரிய பணிகளை அங்குள்ள கைவினைப் பொருட்களும் பிறவும் காட்டின. இக்கண்காட்சியில் 'பொய்யாமொழி' எனும் மின்கணிப்பி இயங்கியது, அறிவியலின் அற்புதங்கள், வெளிப்பட்டன. திருக்கோயில்கள், ஆழ்கடல்கள், அரியலூர் தமிழ்நாடு சிமெண்ட் ஆலை, மெட்ரோவாட்டர் காட்சி, பட்டுவளர்ச்சி, சிலம்பில் நெய்யும் தொழிலின் மேன்மை, அணிகலன் முதலியவை காட்சி விளக்கமாய் அமைக்கப்பட்டிருந்தன.

நூற்றுக் கணக்கான கடைகள், இராட்சத ராட்டினம், குட்டிரயில், மினிசர்க்கஸ், பாம்புப்பண்ணை, மந்திர தந்திரச் காட்சிகள், குழந்தைப் பூங்கா, முதலைப் பண்ணை, உல்லாசப்படகு போன்ற பொழுதுபோக்கு அம்சங்களும் இப்பொருட்காட்சியில் இடம்பெற்றிருந்தன. பொருட்காட்சியில் அமைந்துள்ள ' அறிஞர் அண்ணா கலையரங்கில் நான்தோறும் நாட்டிய, நாடகக் கலை நிகழ்ச்சிகளும், மற்ற மாநில கிராமியக்கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றதோடு, திறந்த வெளி திரையரங்கில் திரைப்படமும் இலவசமாகத் திரையிடப்பட்டது.

உலகத் தமிழ்மாநாட்டில் ஊர்வலமாக வந்த அலங்கார வண்டிகள் அனைத்தும் பொருட்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன.

அழகிய அறிவுக்கு விருந்தூட்டிய இவ்வரிய பொருட்காட்சி, ஒருமைப்பாட்டை உணர்த்தும் ஒப்பற்ற கண்காட்சியாக விளங்கியது.

## வெளியீடுகள்

### மலர்

முரசுக் கட்டிலில் துயில் கொண்டிருக்கும் மோசிகீரனாருக்கு, மாமன்னன் பெருஞ்சேரலிரும்பொறை கவரி வீசிடும் காட்சியினை முகப்போவியமாகக் கொண்ட உலகத் தமிழ்மாநாட்டு மலரினை திரு. எம். எம். இஸ்மாயில் வெளியிட்டார். குடியரசுத் தலைவர் நீலம். சஞ்சீவரெட்டி, துணை குடியரசுத் தலைவர் எம். இதயதுல்லா, பிரதமர் இந்திரா காந்தி, ஆளுநர் சாதிக்அலி ஆகியோர். தமிழ்நாடு சீரும் சிறப்பும் பெற்று ஆக்கவழியில் செயல்பட மலருக்கு வாழ்த்து மடல்களை நல்கியுள்ளனர். தமிழுக்குத் தளராத தொண்டாற்றி, புகழால் தம்பெயரை நிலைநாட்டி மறைந்த அறிஞர்களுக்கு அஞ்சலி செய்யும் வகையில் 'வாழையடி வாழை என வந்த தமிழ்ப்புலவோர்' எனும் தலைப்பிலமைந்த புகைப்படங்கள் 126 மலரில் தொகுக்கப்பட்டிருப்பது போற்றற் குரியது; இப்புலவர்களைப் போற்றி இரா. முத்துக்குமாரசாமி எழுதியுள்ளார்.

இதனையடுத்து மலரில் 'அமுதத் தமிழ் வளர்ப்போம்' என்ற தமிழக முதல்வரின் கட்டுரை மலருக்குள் நம்மை அமைத்துச் செல்லும் ஒன்றாக அமைவதோடு தமிழ்மொழியின் தோற்றத் தையும் வளர்ச்சியையும் அங்கை நெல்லிக்கனி போல் காட்டுகிறது. பின் நாவலர் நெடுஞ்செழியனின் 'மலர்வாயில்' எனும் பகுதி அமைகிறது. மலரில் தமிழ்க் கட்டுரைகள் 85-ம், ஆங்கிலக் கட்டுரைகள் 13-ம், கவிதைகள் 14-ம் இடம்பெறுகின்றன; ஒன்று முதல் 416பக்கத்தில் தமிழ்க் கட்டுரைகளும் அடுத்து 22 பக்கங்களில் ஆங்கிலக் கட்டுரைகளும் இடம் பெறுகின்றன. மலரில் மொத்தப் பக்கங்கள் 592. மலரிலுள்ள விளம்பரங்கள் தமிழ் இலக்கியக் காட்சிகளைக் கொண்டு அமைந்திருப்பது எண்ணி இன்புறற்குரியது.

இம்மலர் அரியதொரு கருத்துக் களஞ்சியம். இதில் காணப்படும் அரியகருத்துகள் தமிழின் கூறுகள் அனைத்தையும் காட்டுவதோடு எதிர்காலத்தில் இம்மொழி நன்கு தழைத்துச் செழித்து வளர எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதையும் காட்டுகின்றன.

இம்மலர் மட்டுமன்றி 'மகாநாட்டு நினைவுமலர்', மகாநாட்டு 'யார் எவர்' என்னும் மலர், 'கலை நிகழ்ச்சி மலர்' ஆகிய மூன்று ஏடுகளும் மாநாட்டையொட்டி வெளிவந்துள்ளன. ஈழத்துத் தமிழின் பண்பு, அமைப்புநிலை, இலக்கியத் துறையிலும் இலக்கணத் துறையிலும் வழிகாட்டிய ஈழத்துப் பெரியார்களின் சாதனைகள், ஈழத்துக் கலைகள், சமய வழிபாட்டு முறைகள் முதலியவற்றைத் தெரிந்து கொள்வதற்குரிய 44 கட்டுரைகள் அடங்கிய நினைவு மலர் மிகவும் பயனுள்ள ஒரு படைப்பாக அமைந்துள்ளது.

'யார் எவர்' என்னும் சிறிய ஏடு மகாநாட்டுப் பிரதி நிதிகளின் விவரங்களைப் படங்களுடன் தருகிறது. பார்வையாளராகப் பங்கு பெற்றோர் மகாநாட்டு அமைப்பாளர்கள், உதவிசெய்தோர் முதலியோர் பற்றிய விபரங்களைக் கொண்ட இவ்வேடு எடுப்பான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது.

'கலைநிகழ்ச்சி மலர்' கலை நிகழ்ச்சிகள் என்னென்ன நடைபெற்றன, எப்படி நடைபெற்றன, யார் யாரால் நடத்தப்பெற்றன போன்ற செய்திகளைத் தாங்கி அழுகுறமிளிர்கிறது.

## நூல்

தமிழர் நாட்டு விளையாட்டுகள், தமிழர் ஆடைகள், தமிழர் கண்ட மனம், தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், தமிழக நாட்டுப்புறக் கலைகள் என்ற உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன வெளியீடுகளான ஐந்து நூல்களை அமைச்சர் செ. அரங்கநாயகம் வெளியிட மாண்புமிகு முதல்வர் பெற்றுக்கொண்டார்.

மாண்புமிகு முதல்வர் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகமும், உலகத் தமிழ்ச் சங்கமும் நிறுவப்படும் எனும் நற்செய்தியினை மாநாட்டில் வெளியிட்டார். 1981–ஆம் ஆண்டில் தமிழக முதல்வரால் தமிழ்ப் பல்கலைக் கழகம் தொடங்கப்பெற்றது. கலைவளங்களைக் கற்பிக்கும் நிறுவனமாக, பண்பாட்டுப் பலகணியாக, ஆய்வரங்காக திகழுமிது வெளிநாட்டவர்க்குத் தமிழ்க்கற்பித்தல், அவர்களது ஆய்வுகளுக்குத் துணைபுரிதல், இந்திய ஆட்சிப்பணி பயிற்சியாளர்களுக்குத் தமிழ்மொழிப் பயிற்சியளித்தல் போன்ற பணிகளைப் புரிந்து வருகின்றது.

1986 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் மதுரையில் 'உலகத் தமிழ்ச் சங்கமும் முதலமைச்சரால் தொடங்கப்பெற்றது. இச்சங்கம் உலகமெலாம் வாழும் தமிழர்களுடன் தொடர்பு கொண்டு தமிழ்மொழி இலக்கியம் – கலை – பண்பாடு முதலியவற்றை ஓம்புதற்கும் பரப்புதற்கும் தொண்டாற்றுவதைதன் நோக்காக் கொண்டு எழுந்தது.

1966 இல் முதல் உலகத் தமிழ் மாநாட்டில் 'Delegate' என்னும் சொல்லுக்கு முதன்முதலில் தமிழ்ச் சொல் உருவாக்கினர். பின் இம்மாநாட்டில் இச்சொல்லுக்குப் ' பேராளர்' என்ற தமிழ்ச்சொல் உருவாக்கப்பட்டது. இது போல் இன்னும் பல ஆங்கிலச் சொற்களுக்கு இம்மாநாட்டின் வழி தமிழ்ச் சொற்கள் உருவாக்கப்பட்டன.

ஆளுநர் சாதிக்அலி, மத்திய அமைச்சர்கள், திரு. ஆர். வெங்கட்ராமன், திரு. ஆர். வி. சாமிநாதன், முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம் ஆகியோர் நிறைவு விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

மற்றைய நான்கு உலகத்தமிழ் மாநாடுகளை வெற்றி பெற நடத்திய மாமேதை சுப்பையாப் பிள்ளை அவர்களின் தொண்டு இம்மாநாட்டின் வெற்றிக்கு நாதமாக அமைந்தது. மாநாட்டில் கலந்து கொண்ட பீகிங் வானொலி அறிவிப்பாளர் சாங் வே. ஜீன் சீன – இந்திய மக்களுக்கிடையிலான நட்பை வளர்க்க இம்மாநாடு பெரிதும் வழிவகுக்கும் என்று கூறினார்.

உலக ஒற்றுமைக்கு இம்மாநாடுகளும் வழிவகுக்கின்றன் என்பதை தமிழர்களாகிய நாம் உணரும் போது பெருமையுறுகிறோம்.

## 1.6.6. ஆறாம் உலகத் தமிழ் மாநாடு – 1987

இம்மாநாடு கோலாலம்பூரில் 1987 நவம்பர் 15 முதல் 19 வரை நடைபெற்றது. மலேசியத் தமிழர் தலைவர் மாமனிதர் விருதுபெற்ற மலேசியப் பொதுப்பணித்துறை அமைச்சர் டத்தோச. சாமிவேலு மாநாட்டு ஏற்பாட்டுக் குழுத் தலைவராயிருந்தார். மலையகம் போற்றும் மக்கள் தொண்டர், மலேசிய நாடாளுமன்ற உறுப்பினர், உலகத் தமிழர் மாமன்றத் தலைவர் டாக்டர், வி. டேவிட்மாநாட்டின் இணைத் தலைவராயிருந்தார்.

இந்திய ஆய்வியல் துறை, மலேயாப் பல்கலைக் கழகம், உலகத் தமிழர் மாமன்றம் ஆகிய அமைப்புகளோடும், மலேசிய அரசின் ஆதரவோடும் மலேயாப் பல்கலைக் கழகத்தில் மாநாடு நடந்து முடிந்தது.

ஆய்வரங்கங்கள், கண்காட்சிகள், சொற்பொழிவுகள், பண்பாட்டு நிகழ்ச்சிகள், கலைநிகழ்ச்சிகள் எனப்பல்சுவை நிகழ்ச்சிகள் மாநாட்டில், இடம்பெற்றன.

## மாநாட்டு மலர்

கருத்தரங்கக் கட்டுரைகள் இதுவரை வெளியிடப்படவில்லை. மாநாட்டு மலர் பலவகையான கருத்துகளைத் தாங்கி வந்துள்ளது. மலேசியப் பிரதமர் டாக்டர் மகாதீர் பின்முகமது, மலேசிய முன்னால் பிரதமர் துங்கு அப்துல் ரகுமான் புத்ரா, குடியரசு துணைத்தலைவர் ஆர். வெங்கட்ராமன், மலேசிய துணைச் செயலர் புல்க் சட்டர்ஜி, மலேசிய அமைச்சர்கள் டத்தோ டாக்டர் லிங்லிலாங், டைய்ம் ஜய்முடின், அன்வர் இப்ராஹிம், டத்தோ.சி. சுப்பரமணியம், டத்தோ கு. பத்மநாபன் உலகத்தமிழர் மாமன்றத் தலைவர் டாக்டர் வி.டேவிட் மாநாட்டுப் பொதுச் செயலர் பேராசிரியர் த. மாரிமுத்து, இந்தியக் காங்கிரசுப் பொதுச் செயலாளர் திரு. ஜி.கே. மூப்பனார், திருக்குறள் நெறி பரப்பு மைய இயக்குநர் திருக்குறளார் வீ. முனுசாமி, பேராசிரியர் மால்கம் எஸ். ஆதிசேசையா, துணைவேந்தர் பெ.பா. சுந்தரேசன், பேராசிரியர் சி. நயினார் முகமது ஆகியோர் மாநாட்டு மலருக்கு தமிழின் பெருமையை வெளிப்படுத்தும் வண்ணம் வாழ்த்து மடல்களை நல்கியுள்ளனர். 'அறிமுகம் தேவைப் படாத அறிவுமுகங்கள்' என்ற தலைப்பில், தமிழ் அறிஞர் பலரின் புகைப்படங்கள் மலரில் இடம்பெற்றுள்ளன.

'தமிழன்னைக்குப் பரிசளிப்போம் வாரீர்' என்ற மாநாட்டுத் தலைவர் டத்தோ சாமிவேலுவின் கட்டுரை உட்பட 8 கட்டுரைகள் மலரின் தொடக்கத்தில் இடம்பெறுகின்றன. அவை தவிர அறிவியல், இயற்கை, வரலாறு, சமுதாயம், மொழி, இலக்கியம், கலை, சமயம், மருத்துவம், தமிழுக்கு உயர்வளித்த சான்றோர்கள் என்ற பகுப்பில் 163 கட்டுரைகள் அமைகின்றன. அறிவியல் தொடர்பாக 24 கட்டுரைகள் இடம்பெற்றிருப்பது இம்மலரின் சிறப்பு அம்சமாகிறது.

மலரின் இறுதியில் அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் தோற்றமும் வளர்ச்சியும் என்ற கட்டுரை இடம் பெறுகின்றது. ஏறக்குறைய 50 கவிதைகள் இடம் பெறுகின்றன.

சுமார் 500-க்கும் மேற்பட்ட பக்கங்களையுடைய இம்மலர் அளவில் பெரிதாக உள்ளது. இம்மலர் உயர்ந்த ஆய்வுகளையும, சிறந்த படைப்புகளையும், தமிழ்மொழியின் மேம்பாட்டுக்குத் தேவையான திட்டங்களையும் தாங்கி வெளிவந்துள்ளது.

## மலேசியாவில் மாநாடு இருமுறை நடக்கக் காரணம்

மலேசியாவில், வழக்கில் இருந்து வருகின்ற மொழிகளில் ஒன்று தமிழ். தமிழகத்தை அடுத்து அதிகமாகத் தமிழர்கள் வாழ்வது மலேசியாவில் தான். தமிழகத்துக்கு அடுத்து, தமிழ்மொழி வளமாக விளங்குவதும் மலேசியாவில்தான். பல்கலைக்கழகத்தில், தமிழுக்கென்று தனிப்பகுதியை அமைத்துத் தமிழ் வளர வழிவகுத்த பெருமை இந்நாட்டுத் தமிழர்களுக்குண்டு.

உலகளாவிய நிறுவனங்கள் தோன்றுவதற்கு பலதுறைகளில் சிறந்து விளங்கிய மலேசியா நிலைக்களனாக அமைந்துள்ளது. உலகளாவிய முதல் தமிழ் நிறுவனமாக உலகத் தமிழ் மன்றம் 1963-இல் கோலாலம்பூரிலே நிறுவப்பட்டது. உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் கிளை மலேசியாவிலும் உள்ளது.

இத்தகைய சிறப்புகளை பெற்றிருந்தமையால் மலேசியாவில் மாநாட்டை இருமுறை நடத்தியுள்ளனர்.

## 1.6.7. ஏழாவது உலகத் தமிழ்மாநாடு – 1989

மொரீசியசுக் கல்விஅமைச்சர் ஆறுமுகம் பரசுராமன் அவர்களது பெருமுயற்சியால் மொரீசியசின் தலை நகரான போர்ட்லூயிஸ் எனுமிடத்தில் 1989 டிசம்பர் முதல் தேதி தொடங்கி எட்டாம் தேதி முடிய ஏழாம் உலகத் தமிழ் மாநாடு நடந்தேறியது.

### மொரீசியசு

இந்துமாக் கடலின் நீலநிற விரிப்பின்மேல், சுடர்வீசும் நன் முத்துப் போல் திகழ்கிறது மொரீசியசு தீவு. பம்பாயிலிருந்து 4,700 கிலோ மீட்டர் தொலைவிலும், கன்னியாகுமரியிலிருந்து 3,640 கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது இச்சிறிய நாடு. 1865 சதுரகிலோ மீட்டர் பரப்பளவுடையது. இதனை இந்துமாக் கடலின் தாரகை என்றும் திறவுகோல் என்றும் பாராட்டுகின்றனர்.

இங்கு 1988 கணக்குப்படி சுமார் பத்து லட்சத்து இருபதாயிரம் மக்கள் வாழ்கின்றனர். ஐரோப்பிய, ஆப்பிரிக்க இனவழி வந்த கிரியோல் மக்களே கூடுதலாவர். இந்திய இனவழி வந்தவர் சுமார் நான்கு லட்சம் பேர் உள்ளனர். இவர்களைத் தவிர சீன இனவழியினரும் உள்ளனர். இந்தியர்களில் தமிழகம், ஆந்திரம், பிகார், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களிலிருந்து குடியேறியவர்களும் உள்ளனர். முதன் முதலில் குடியேறியவர்கள் தமிழர்களே. ஆயினும் இந்தி பேசுவோர் தொகையே கூடுதலாக உள்ளது.

இந்தி, மராத்தி, தமிழ் அனைய இந்திய மொழிகளைத் தொடக்கப் பள்ளிகளில் கற்பிக்கத் தொடங்கியுள்ளனர். தமிழ் தெரிந்தோர் மிக மிக்க் குறைவேயாயினும் சுமார் ஒருலட்சம் தமிழர்கள் அங்கு வாழ்கின்றனர். இத்தமிழர்கள் பிரெஞ்சின் கிளைத் திரிபு மொழியான கிரியோல் மொழி பேசுகின்றனர்.

டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டிருந்த அந்த நாட்டில் பிரெஞ்சு மொழி, பண்பாடு இவற்றின் ஆதிக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. அடுத்திருக்கும்

ரீயூனியனில் வாழும் இரண்டு லட்சம் தமிழர்களும் கிரியோல் மொழியே பேசிவருகின்றனர். மொரிசசில் இப்போது ஆங்கிலமே ஆட்சி மொழியாக உள்ளது.

அங்குள்ள சட்டமன்றத்திலும் அமைச்சரவையிலும் இடம் பெற்றுள்ள பெரும்பாலோர் இந்திய இன வழியினரே என்று கூறப்படுகிறது. அவர்களுள் அறுவர் தமிழ் இன வழியினர்.

## கருத்தரங்கு

நான்கு முதல் ஏழாம் தேதி முடிய கருத்தரங்கு தொடங்கி நடந்தது. ஆஸ்திரேலியா, ஜப்பான், பிரான்ஸ், இங்கிலாந்து, நெதர்லாந்து என ஏறத்தாழ 22 நாடுகளிலிருந்து சுமார் 200 பேராளர்கள் கலந்து கொண்டனர். இந்தியா, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, தென்னாப்பிரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து கூடுதலான பேராளர்கள் வந்திருந்தனர். நியூகினி, சிசிலிபோன்ற சிறுசிறு நாடுகளிலிருந்தும் பேராளர்கள் வந்திருந்தனர். தமிழ் வளர்ச்சித்துறை சார்பில், தமிழக அரசு அனுப்பிய தமிழறிஞர், கலைஞர்யாவரும் இந்த மாநாட்டில் சிறப்பாகப் பங்கேற்றனர். மேலும் பாரதிதாசன் பல்கலைக் கழகம், தமிழ்ப்பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் அனைய தமிழகப் பல்கலைக் கழகங்களும் பல பேராளர்களை அனுப்பியிருந்தன. தமிழக அரசு தமிழறிஞர்களையும், கலைஞர்களையும் அனுப்பியிருந்தது.

கருத்தரங்கின் தொடக்கவிழா டிசம்பர் நான்காம் தேதி, 'மகாத்மா காந்தி நிறுவனத்தி'ல் நடைபெற்றது. இந்நிறுவனம் இந்திராகாந்தி அம்மையார் அளித்த மூன்று கோடி ரூபாய் செலவில் மோகாவில் நன்கு திட்டமிட்டுக் கட்டப்பட்டுள்ளது. நான்குநாள் கருத்தரங்குகளும் இங்கு தான் நடைபெற்றன.

முன்பு அங்கு சென்ற கவியோகி சுத்தானந்த பாரதி எழுதி, சீர்காழி கோவிந்தராஜன் பாடிய "வாழிய வாழியவே மொரீசு! வளங்குலுங்கும் பொலிவுடனே மொரீசு" என்ற பாடலைப் படமாக ஆக்கிய தொலைக்காட்சியுடன் மாநாடு தொடங்கியது. "பன்னாட்டுப் பேராளர் வருக! பைந்தமிழ்ப் புலவோர்கள் வருக"

என்ற வரவேற்புப் பண் பாடப்பட்டது. தொடக்கவிழாவில் மாநாட்டுத் தேசீய அமைப்புக்குழுச் செயலாளர் திருமலைச் செட்டி வரவேற்றார். அங்குள்ள உலகத்தமிழாராய்ச்சிக் கிளைத் தலைவர் படையாட்சி என்பவர் வாழ்த்தினார். இங்கிலாந்துப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரான ஆர். ஈ. ஆஷர் தலைமை தாங்கினார்.

கருத்தரங்கினைத் தொடங்கி வைத்த தமிழ் இனவழிவந்த ஆளுநர் 'வீரசாமி ரிங்காடு ' தமிழ் உணர்ச்சிமிக்கவர். இவர் தமிழ் விழாக்களில் தவறாமல் கலந்து கொள்வார். ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்த்துறை ஒன்றைத் தொடங்கி வைக்க பெரும் முயற்சி செய்தவர். இவர் தமது உரையில், "மொரீசு தீவில் பல்வேறு இனத்தவர் வாழ்ந்து வருகின்ற போதிலும், தமிழ்மொழி தனது முக்கியத்துவத்தை இழக்காமல் உள்ளது" என்று கூறினார்.

மொரீசியசு நாட்டுக் கல்வி அமைச்சர் ஆறுமுகம் பரசுராமன் "தமிழ்ப் பண்பாடு அழிந்து போகாது காப்பாற்றப்படவும், மேலும் மேன்மை பெறவும் வழிவகைகளை இம்மாநாடு வகுக்க வேண்டும். வெளிநாடுகளில் வாழும் இந்திய இனத்தினர் அங்குள்ள பிரச்சாரச் சாதனங்களின் தாக்கத்தால் தங்களது சொந்தப் பண்பாட்டை இழக்கும் மோசமான சூழ்நிலை உள்ளது. இது பற்றியும் மாநாடு முக்கியமாக ஆராய வேண்டும்" என்று கூறினார். இவர் தாம் பேசும் கூட்டங்களிலெல்லாம் இரண்டொரு தமிழ்த் தொடர்களையேனும் பேசும் இயல்புடையவர்.

அந்நாட்டுத் தலைமை அமைச்சர் 'அனிருத்த ஜகநாத்' உரையாற்றிய போது, " தொன்மையான தமிழ்க் கலாச்சாரத்தின் பண்பாடு பற்றி சிந்திக்கத் தூண்ட இம்மாநாடு துணைபுரியும்" என்று சொன்னார்.

இதனைத்தொடர்ந்து மலேசிய அமைச்சர் டத்தோசாமிவேலு, தமிழகக் குழுவைச் சேர்ந்த அவ்வை நடராசன், நாடாளு மன்றச் செயலர் பழனியாண்டி ஆகியோரும் உரையாற்றினர். மறுநாள் பேரவைக்குப் பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் தலைமை தாங்கினார். தொழிலதிபர் நா. மகாலிங்கம், துணைவேந்தர் வா. செ. குழந்தை சாமி ஆகியோர் உரையாற்றினர்.

பின்னர் நான்கு நாள்களிலும் இரண்டு பேரவைக் கூட்டங்கள், ஐந்து அமர்வுகள், ஒரு கவியரங்கம் யாவும் நடைபெற்றன. ஒவ்வோர் அமர்வின் போதும் ஆறுதுறைகள் பற்றித் தனித்தனி அறைகளில் கட்டுரைகள் படித்தளிக்கப்பட்டன. இலக்கியம், மொழியியல், வரலாறு, பண்பாடு எனப் பல்வேறு துறைகளுக்கு இடமளிக்கப்பெற்றன.

பொதுவாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் 150–க்கும் மேற்பட்ட கட்டுரைகள் படிக்கப் பெற்றன. திருமதி சௌந்தரா கைலாசம் கவிதை பாடி வாழ்த்தினார். மொரீசியசு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழாராசிரியராகப் பணிபுரியும் கவிஞர் உலகநாதனின் கவிதை ஒன்று மாநாட்டில் வெளியிடப் பட்டது.

"தமிழகம் பாரதம் தக்கநூல் படிகள்
தந்தால் தாய்மொழிச் சுவையை உணர்வோம்!
இந்தக் குறையை இன்றே நீக்கிட
எவரும் உதவ வருவீர்! வருவீர்!" என்ற இவரது கவிதைவரிகள்
தமிழ்க் கல்வி வளர்ச்சியில் இவருக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது.

நிறைவு விழாவில் தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த தமிழ்ப் பெண்மணி ஒருவர் பாரதி பாடிய தமிழ் வாழ்த்துப் பாடினார்.

பொதுப் பேரவைக் கூட்டங்கள் அங்குள்ள பாரதி அரங்கிலும், மொரீசியசு பல்கலைக் கழக அரங்கிலும் நடந்தன.

## மாநாட்டு மலர்

மலர் சிறிதாக இருப்பினும் சிறப்புறு செய்திகள் பல கவினுற இதில் இடம்பெற்றுள்ளன. மொரிசியசு தலைமை அமைச்சர் அனிருத்த ஜகன்னாத், அமைச்சர் ஆறுமுகம் பரசுராமன், மாநாட்டுப் பொதுச் செயலர் நா. திருமலைச் செட்டி, தமிழக அமைச்சர் க. அன்பழகன், சட்டபேரவைத் தலைவர் தமிழ்க்குடிமகன், தமிழ்நாடு காங்கிரசு தலைவர் ஜி.கே. மூப்பனார், முன்னாள் அமைச்சர் க. ராசாராம், துணைவேந்தர் டாக்டர் வா. செ. குழந்தை சாமி,

மொரீசியசு கவுரவத் தூதுவர் நா. [redacted], உலகத் தமிழ்ஆராய்ச்சி மன்றச் செயலர் திரு. டேவிட ஆகியோர் மலருக்கு வாழ்த்து மடல்களை நல்கியுள்ளனர். மலரின் தொடக்கத்தில் நுழைவாயிலாக மூன்று கட்டுரைகள் இடம் பெறுகின்றன. இவை தவிர 34 தமிழ்க்கட்டுரைகளும், 9 ஆங்கிலக் கட்டுரைகளும், 19 தமிழ்க்கவிதைகளும், 2 ஆங்கிலக் கவிதைகளும், ஒரு சிறுகதையும் மலரில் இடம் பெற்றுள்ளன. முதல் மூன்று தவிர்த்த ஏனைய அறுபத்தைந்தும் ஒன்றுமுதல் 168 பக்கங்களில் அமைகின்றன. பொருளடக்கமோ, துறைப் பிரிவுகளோ மலரில் இடம் பெறவில்லை.

## கலை நிகழ்ச்சிகள்

கருத்தரங்கு டிசம்பர் நான்காம் தேதி நடைபெற்றதால் முதல் மூன்று நாட்கள் ஊர்சுற்றிப் பார்க்கவும், கலை நிகழ்ச்சிகளைக் காணவும் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. தமிழர் வாழும் பகுதியில் மட்டுமின்றி, நாடெங்குமே வண்ணவிளக்குத் தோரணங்களும் வரவேற்புத் துணிக்கம்பங்களும் காட்சியளித்தன. கலைநிகழ்ச்சிகள் பல இடங்களில் நடந்தன. தமிழ்த்திரைப் படவிழா நடத்தப்பட்டது. 'நாயகன்' திரைப்படத்துடன் விழா தொடங்கியது. நடிகர் கமலஹாசன் சிறப்பு விருந்தினராக வந்து அன்றும், மறுநாளும் கலந்து கொண்டார்.

கலைநிகழ்ச்சிகளில் வழுவூரார் மகன் சாம்ராஜின் நாட்டியக் குழுவினர் அளித்த தமிழக முதல்வர் கருணா நிதியின் 'சங்கத் தமிழ்' நாட்டிய நாடகம் குறிப்பிடத் தக்கதாக அமைந்தது. வீணை எஸ். பாலச்சந்திரின் பாரதி பாடல்களை அவருடைய வீணை வாய்விட்டுப் பாடியது.

## கண்காட்சி

அமைச்சர் ஆறு முகம் பரசுராமன் டிசம்பர் முதல் தேதி 'தமிழர் குடியேற்றக் கண்காட்சி'யைத் திறந்து வைத்தார். 18-ஆம் நூற்றாண்டில் தமிழர் குடியேற்றம் தொடங்கி, அன்றுமுதல் அந்தத் தமிழர்கள் வாழ்ந்த விதம், ஆற்றிய தொண்டு, பயன்படுத்திய பொருட்கள் எல்லாம் இக் காட்சியில் கோடிட்டுக் காட்டப்

பட்டிருந்தன. 1943 இல் விடுதலைப் போராட்டத்தில் குண்டடிப்பட்டு உயிர்நீத்த தமிழ்ப் பெண்மணி 'அஞ்சலை கருப்பனி'ன் படம் காண்போர் உள்ளத்தை உருக்குவதாய் இருந்தது.

தமிழகத்தைச் சேர்ந்த கைவினைப் பொருள் நிறுவனம் ஒன்றும், உள்ளூர் நிறுவனம் ஒன்றும் கூட்டாக இணைந்து 'வர்த்தக கண்காட்சி' ஒன்றினைச் சிறப்புற நடத்தின.

## ஊர்வலம்

டிசம்பர் மூன்றாம் நாள் பிளா சாவிலுள்ள தமிழர் பண்பாட்டுச் சின்னமாகிய தூண் அருகே புறப்பட்ட தமிழ்விழா ஊர்வலத்தில் நமது நாட்டைப் போலவே பல வண்டிகளில் பலதிறப்பட்ட ஒப்பனை ஓவியங்கள் காட்சியளித்தன. திருவள்ளுவர், ஔவையார் மற்றும் தமிழர் பண்பாட்டை விளக்கும் பல வண்ண வண்ண ஓவியங்கள், பலவித ஒப்பனை வேசங்கள் அவ்வூர்வலத்தில் கொண்டு செல்லப் பட்டன. கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்ட பானர் ஒன்றும் ஊர்வலத்தில் சென்றது.

## மாநாட்டில் வெளிப்பட்ட பக்தியுணர்வு

மொரீசியசு மக்களிடமிருக்கும் பக்தியுணர்வுதான் அவர்களைத் தமிழுக்கு மீட்கும் சக்தியாக விளங்குகிறது என்பதை மாநாட்டு நிகழ்ச்சிகளும் வெளிப்படுத்தின. டிசம்பர் முதல் தேதி மாலை 'போர்ட் லூயிசு' தலைநகரில் அமைந்துள்ள சொக்கலிங்கம் மீனாட்சியம்மன் கோயில் வழிபாடும், இரவு அந்தக் கோயில் சார்பாக விருந்தும் அளிக்கப்பெற்றன. அந்தமக்கள் தங்களுக்குத் தமிழ் தெரியாத நிலையிலும் 'பிடியதனுருவுமை . . .' "உலகலாம் உணர்ந்தோதற்கரியவன்" முதலிய திருமுறைப் பாடல்களை ஓதுவார்கள் பாடும் முறையிலேயே பண் பிசகாமல் குழுவாகப் பாடி வணங்கிய முறை தாய்த் தமிழர்களை நெக்குருக வைத்தது. ஒவ்வொரு கோயிலிலும் அர்ச்சனை முடிந்த பின் ஆணும் பெண்ணுமாகக் குழுவிசையாகப் பாடுவது வழக்கத்தில் இருக்கின்றது.

மொரீசசில் சுமார் 125 தமிழ்க் கோயில்கள் உள்ளன. அவற்றுள் ஐந்து சிவன் கோயில்கள்; பிற அனைத்தும் முருகன், மாரியம்மன் கோயில்கள். தமிழை மறந்தாலும் சமயவுணர்வையும் பண்பாட்டையும் அவர்கள் இழந்துவிடவில்லை.

டிசம்பர் இரண்டாம் நாள் மோகாவில் மொரீசசு தமிழ்க் கோயில்களின் கூட்டமைப்புக்கான கட்டடத்திற்குக் கால்கோள் செய்யப் பட்டது. மோகாவிலுள்ள ஓர் அரசு மருத்துவமனைக்கு அரசே முன்வந்து சுப்பிரமணிய பாரதி பெயரைச் சூட்டி விழா எடுத்தது.

தமிழர் அனைவருக்கும் எழுச்சியூட்டியமை இம்மாநாட்டின் பயனாக அமைந்தது. இன்று தொடக்க நிலையில் மட்டுமிருக்கும் தமிழ்க்கல்வி, விரைவில் இன்னும் வளர இம்மாநாடு களனாகக் காட்சியளித்தது. தமிழ்பரவியுள்ளது. தமிழர் உலகெங்கும் சென்றுள்ளனர். ஆனால் தமிழ்மொழி மொரீசியசு தீவில் மறைந்து வருகிறது. இந்நிலை மாறித் தமிழர் வாழ்கின்ற நாடுகளிலெல்லாம், தமிழைக் காப்பதற்கான வாய்ப்புக்கும், தமிழனோடு தொடர்ந்து தொடர்பு வைத்துக் கொள்வதற்கான வாய்ப்புக்கும் இம்மாநாடு வழி வகுக்கும்.

## முடிவுரை

நடந்து முடிந்த இவ்வேழு மாநாடுகளுக்கும் மலர்கள், கருத்தரங்க நூற்றொகுதிகள் முழுமையாக வெளிவரவில்லை. 1,2,5,6,7 மாநாடுகளுக்கு மலர்கள் வெளிவந்துள்ளன; மூன்றிற்கும், நான்கிற்கும் வந்ததாகத் தெரியவில்லை. அதேபோல் முதல் ஐந்து மாநாட்டுக் கருத்தரங்குகட்கு நூற்றொகுதிகள் வெளிவந்துள்ளன; ஆறிற்கும், ஏழிற்கும் வெளிவரவில்லை. இக்கருத்தரங்கத் தொகுதிகளும் வெளிவருதல் பயனுடையதாய் இருக்கும். இவ்வாராய்ச்சிக் கட்டுரைகள் பொதுமக்களைச் சேரும் வண்ணம் பரப்பப்பட வேண்டும்.

இத்தகைய மாநாடுகள் தொடர்ந்து நடைபெற்று வருவதன் பயனாக தமிழ் மக்களிடையே மொழிப்பற்றும் இனப் பற்றும்

வளர்ந்து வருகின்றன. தமிழின் அருமையும் பெருமையும் உலகறிந்து வருகிறது. தமிழ்மொழி வலிவும் பொலிவும் பெற்று வருகின்றன.

மாநாட்டின் போது படிக்கப்படும் ஆராய்ச்சிக் கட்டுரைகள், பல புதிய உண்மைகளை, மொழியின் சிறப்புத் தன்மைகளை வெளிப்படுத்துகின்றன; பரந்த நோக்கும் பலமொழியறிவும் நெறியான ஆய்வு முறைக்குத் தேவை என்பதைப் புலப்படுத்துகின்றன; நமது மொழி எதிர்நோக்கும் பிரச்சினைகளை அடையாளம் கண்டு கொண்டு, அதன் எதிர்கால வளர்ச்சிக்கான திட்டங்களை வகுக்க வழி செய்கின்றன; தமிழின் நிலை பற்றிய பல ஆழமான ஆய்வுகள் தமிழுக்குத் தரம் சேர்க்கின்றன.

மாநாடுகள் வழி உலகத்தமிழ் அறிஞர் பலரும் கூடிப்பேசி தமிழ் உணர்வுகளை மேலோங்கச் செய்ய வழி பிறந்துள்ளது. மாநாட்டில் கலந்து கொண்ட அறிஞர் மட்டுமன்றி பார்வையாளர்கள் பலரும் தமிழாராய்ச்சியில் ஈடுபட இம்மாநாடுகள் காலாக இருந்துள்ளன.

தமிழ்நாடு பல வளர்ச்சி நிலைகளை எட்ட இனிவரும் மாநாடுகள் உறுதுணை புரிய வேண்டும்.

தமிழ்ச் சமுதாயம் தமிழின் வாயிலாக உலக அறிவினைப் பெறவேண்டும். தமிழால் எதனையும் சாதிக்க இயலும் என்ற நிலை உறுதிப்பட வேண்டும். அனைத்துத் துறைகளும் தமிழுக்குத் தொண்டு செய்ய வேண்டும். குறிப்பாக அறிவியல் துறைக்குத் தமிழில் ஆக்கமும் ஊக்கமும் தரவேண்டும். தமிழை இயல், இசை, நாடகம், அறிவியல் என்ற நான்கு நிலைகளில் காணவேண்டும். அறிவியற்கலை யாவற்றினையும் தாய்மொழி வாயிலாகப் பயிலும் போது சமுதாய வளர்ச்சி எளிதில் சாத்தியமாகும். பொறியியல், மருத்துவம் முதலிய உயர்கல்வியனைத்தையும் தமிழில் பயிற்றுவித்து தமிழ்மொழியை அறிவியல் மொழியாக ஆக்கும் போது தமிழ்க்கல்வி மேம்படுத்தப்படும்.

தமிழ்நாட்டிலே தமிழ் ஆட்சி மொழியாகவும், அலுவலக மொழியாகவும், பல்கலைக்கழக மொழியாகவும் மாற வேண்டும்.

இந்தியாவில் எல்லா மாநிலத் தலைநகர்களிலும் தமிழ் கற்பிக்கும் வசதியினைச் செய்ய வேண்டும். உலகெங்கிலும்

தமிழ்மொழி கற்க விரும்புவோர்க்குத்தக்க ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும்.

இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு மற்றும் தென்கிழக்காசிய நாடுகளில் தமிழர் கணிசமான அளவு வாழ்கின்றனர். இவர்களுக்கும் இவர்களுடைய வழித் தோன்றல்களுக்கும் தமிழ் மற்றும் தமிழ்த்தொடர்பு அற்றுப் போகாதிருக்க, இதற்கான பாடத்திட்டங்கள், நூல்கள் உருவாக்கப்பட்டு அவை 'கணினி மூலமாகக் கற்றுத் தரப்பட வேண்டும்.

சங்ககால இலக்கியங்களிலிருந்து தற்கால இலக்கியங்கள்வரை தமிழின் பண்பாட்டினை வெளிப்படுத்தும் நூல்கள் பலவும் உலக மொழிகளனைத்திலும் மொழிபெயர்க்கப்பட வேண்டும்.

தமிழ்க் கலைகள் நசிந்து விடாமல் பாதுகாக்கப் பட வேண்டும்.

அருந்தமிழ் நூல்களைக் கொண்ட அரிய சுவடிகள் பதிப்பிக்கப்பட வேண்டும்.

உலகில் உயர்தனிச் செம்மொழிகள் என்று போற்றப் பெறுகின்ற கிரேக்கம், இலத்தீன், எபிரேயம், சீனம், சமஸ் கிருதம், தமிழ் ஆகிய ஆறனுள்ளும் தமிழ்மொழி மட்டுமே இன்றுவரை பேச்சுவழக்கிலும் இலக்கிய வழக்கிலும் நின்றிலங்கு வதாம். இத்தகைய தமிழின் மேன்மைகளைத் தமிழர்களே உணராத நிலையினை மாற்றி உலகிற் சிறந்த உயர் தனிச் செம்மொழி தமிழே என்பதனை நிறுவுதல் வேண்டும்.

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்ற நிலையினை உருவாக்க வேண்டும்

# இயல்-2

## 2.1. Archaeology.

1. **An Outstanding Epigraphical Discovery in Tamil Nadu,**

R. Nagaswamy, 5-1: 2-67-2-72, 1981.

2. **An Unpublished Mahisasuramard dart in Thailand,**

M.C. Subhadradis diskul, 2-2: 432-433, 1971.

3. **A Study of the Meykkirththis of the Cholas.**

S. JhalliuNathan, 2-2: 422-426, 1971.

4. **A Study of theTamil Jaina Inscriptions at Kalukumalai**

A. Veluppilli, 2-2: 416-421, 1971.

5. **Archaeology and Epigraphy in Tamil Nadu A Survey of Recent Developement.**

R. Nagaswamy, 3: 56-71, 1973.

6. **Archaeology, linguisties and Ancient Dravidian,**

William Bright, 5-1: 2-1-2-6, 1971.

7. **Archacology and the South Indian Dravidian Problem,**

P. Joseph, 22-2: 387-393, 1971.

8. **Archaeology and Tamil Studies,**

Jean Filliozat, 2-1: 3-11, 1968.

9. **Art and Architecture in Tamil Nadu,**

T.V. Mahalingam, 2-1: 39-53, 1971.

10. **Cluster Analysis of Indus Sings - A Computer approach,**

Gift Siromoney and
Abdul Huq, 5-1: 2-15-2-24, 1981.

**11. Computer Analysis of early chola and Pandiya Sculptures-an inconometrics study.**

Gift Siromoney, S. Govindaraju
and M.Bagavandas, 5-1: 3-7-3-16 1981.

**12. Computer Methods of dating Medieval Tamil Inscription,**

Gift Siromoney, M. Chandrasekaran,
R. Chandrasekaran, 5-1: 2-7-2-14, 1981.

**13. Creative Performance in Tamil Sculpture An ethnographic response to Art Historians,**

Peter.M. Gardher, 5-1: 3-53-3-62, 1981.

**14. Handicrafts of Tamilnad from Ancient Times to the Present,**

Kamaladevi
Chattopadhyay, 2-2: 492-510, 1971.

**15. Influence of Dravidian Architecture on other schools,**

K.V. Soundra Raja, 5-1: 3-63-3-72, 1981.

**16. Kumari Kandam - The Last cantinent,**

N. Mahalingam, 5-1: 2-53-2-66, 1981.

**17. Method of parallelisms in the Interpretation of the profo Indian Script,**

Iravatham Mahadevan, 3: 44-55, 1973.

18. **On the Harappan'Yoke carrier' pictogram and the Kavadi worship,**

Asko Parpola, 5-1: 2-73-2-90, 1981.

19. **Place signs in the IndusScript,**

Iravatham Mahadevan, 5-1: 2-91-2-107, 1981.

20. **Proto-Dravidian and sanskrit in Reconstructing the Earliest from of Hinduism (Notes on Methodology,**

Asko Parpola, 3: 29-32, 1973.

21. **Recent Progress in Tamil Epigraphical Research,**

K.G. Krishnan, 5-1: 2-49-2-52, 1981.

22. **Sittnnavasal and Tanjavur paintings, the tradition they reveal in respect of technique and treat ment,**

Leela Ganapathy, 5-1: 3-25-3-52, 1981.

23. **Some Contact and comparisons between the Ancient near East and the Indus Valley Civilization,**

Alan David Croun, 2-2: 379-386, 1971.

24. **Some Ancient Crafts and Technology in Tamil nad as Revealed in Excavations,**

K.V. Raman, 2-2: 394-401, 1971.

25. **Some Aspects of Dravidian Architecture and sculpture and their Impact on Ceylon,**

L.S. Dewaraja, 2-2: 427-431, 1971.

26. **Tamil Epigraphical Studies in Sri Lanka,**

Selladurai Gunasingam, 5-2: 11-61-11-72, 1981.

**27. The Angkor Monuments-A Study,**

Komala Varadan, 5-1: 3-73-3-77, 1981.

**28. The application of Physics to Archaeological investigtion,**

S. Paramasivam, 2-2: 405-409, 1971.

**29. The Art of Painting of the Tamils from the Sangam Age to the Age,**

Trivikrama Narayanam, 2-2: 434-440, 1971.

**30. The Artists and Artisans,**

Natana Kasinathan, 5-1: 3-17-3-24, 1981.

**31. The Harappan Calendar,**

Walter A. Fairser V1s JR 5.1: 2-25-2-48, 1981.

**32. The Koravai - A Folk Custom of the Ceylon Tamil Renainiscent of the Art of the Sangam Age.**

M.D. Raghavan, 2-2: 450-452, 1971.

**33. The Origin and Evolution of the Tamil Vatteluttu and Grantha Scripts,**

R. Nagaswamy, 2-2: 410-415, 1971.

**34. The Role of dance sculptures in Tamilnadu,**

Padma Subramanyam, 2-2: 441-449, 1971.

**35. The S0-Called "Dravidian" of the Indus Inscriptions,**

Kamil N. Zvelebil, 3: 33-41, 1973.

**36. Temple Inscriptions and Music,**

T. N. Ramachandran, 2-2: 474-479, 1971.

## 2.2. Arts - Dance, Drama and Music.

**37. A Comparative study of Some sanskrit and Tamil nadu Texts with Special reference to the Mudras or hand gestures,**

V Sivasamy, 5-1: 4-63-4-71, 1981.

**38. Ancient Musical Modes in Cilappatikaram,**

S. Ramanathan, 1-2: 371-378, 1966.

**39. Ancient Tamil Stage,**

T.E. Gnanamurthy, 5-1: 5-1-5-14, 1981.

**40. Arunagirinathar- The Adigures of Carnatic Music,**

Sri Kantha
Sachithananantham, 5-1: 4-47-4-54, 1981.

**41. study of Two Types of Folk Drama Peculiar to the Tamils of Ceylon,**

S. Vithianantham, 2-2: 457-462, 1971.

**42 A Survey of the Musical traditions of Tamil Nadu,**

S. Ramanathan, 5-1: 4-55-4-62, 1981.

**43. Bharatha Natayam the Dance Art of the Tamils,**

Seedharani Raghu pathy, 5-1; 4-99-4-107, 1981.

**44. Classical Dance of the Ancient Tamils,**

Nirmala Ramachandran, 1-2: 379-389, 1969.

**45. Meledic and Harmonic systemes of Musi,**

P.Sambamoorthy, 2-2: 463-465, 1971.

**46. Music and Musical Instruments of India,**

B. Damodaran, 5-1: 4-85-4-98, 1981.

**47. Music in Silappatikarm,**

Salem S. Jalalakshmi, 5-1: 4-71-4-84, 1981.

**48. Modern Verse Dramma,**

S. Sakthi Perumal, 5-1: 5-53-5-59, 1981.

**49. On the need of a detailed survey of koodiyallam and Bhaagavata Melanaatakam,**

M. Christorpher Byrski, 2-2: 453-456, 1971.

**50. Operas or Musical Plays in Tamil,**

A.N. Perumal, 5-1: 5-15-5-20, 1981.

**51. Social Plays and Modern Trends,**

Poornam Viswanathan, 5-1: 5-21-5-30, 1981.

**52. Some I conographic concepts,**

Saw. Ganesan, 1-2; 403-416, 1969.

**53. Talam : Analysis of Rhythemic Patterns in south India Music.**

V. PA. KA. Sundram, 5-1: 4.39-4-46, 1981.

**54. Terukkuttu - The Traditional theater of TamilNadu,**

Richard A Frasca, 5-1: 5-31-5-52, 1981.

**55. The Case for Unified system of classical Music in SriLanka,**

S.K. Maheswari, 4-2: 321-334, 1977.

**56. The History of Indian Musical Instrumentor,**

S. Premalatha, 5-1: 4-1-4-38, 1981.

**57. The Music of the Ancient Tamils,**

V.P. Raman, 1-2: 389-402, 1969.

**58. The Influence of Tamil Dramatic Tradition an Sinhala Theatre,**

S. Nadarasa, 1-2: 417-428, 1969.

**59. Traditional society and Karnatic Music,**

R.E. Ries, 2-2: 464-473, 1971.

## 2.3. Folklore.

**60. A Comparative Study of the Story of Rama in South India and South -East Asia,**

S. Singaravelu, 1-1: 89-140, 1969.

**61. Comparative Study of Tamil and English Proverbs,**

V. Perumal, 5-2: 10-145-10-159, 1981.

**62. Attitude Towards life as depicted in Tamil Folklore,**

Mazharul Islam, 5-2: 10-15-10-22, 1981.

**63. Folk Music of Tamilnad -**

Shyamala Balakrishnan, 2-2: 480-491, 1971.

**64. Folk Music of Tamil Nadu A Classical Analysis,**

Shyamala Balakrishan, 5-2: 10-97-10-106, 1981.

**65. Folklore Studies in Tamil Language,**

N. Vanamamalai, 5-2: 10-1-10-14, 1981.

**66. Formulae and themes in a few Folk Ballads in Tamil,**

S.D. Lourdu, 5-2: 10-83-10-96, 1981.

**67. Medicine as reflected in folk Songs,**

Saraswathi venu Gopal, 5-2: 10-49-10-74, 1981.

**68. Patterns of Sri Lanka Tamil Folk Songs,**

A. Sanmugadas, 5-2: 10-23-10-34, 1981.

**69. Social Influence in Talattu,**

T. Mangai, 5-2: 10-75-10-82, 1981.

**70. Social life of Folk artists in Ancient Tamil Nadu,**

K. Subramanian, 5-2: 10-125-144, 1981.

**71. The Paandi - Board game in senegal (Africa) and in Tamil Nadu (India)_**

K.P. Aravaanan and
Thayammal Aravannan, 5-2: 11-173-11-190, 1981.

**72. The Use of Popular songs in the Civil Disobedience Movement in Madras Presidency 1930-34,**

S. T. Baskaran, 5-2: 10-35-10-48, 1981.

**73. T.K.C.'S Interprefation of Vali-Vali,**

The evidence of a Puppet - Play and Vindication,

M. Arunachalam, 5-2: 10-107-10-124, 1981.

**74. Trends of Poetry for Children in Tamil,**

V.D. Gopolakrishnan. 5.2: 9-1-9-6. 1981.

**75 ஈழத்திற் சைவ கிராமிய வழிபாடு**

*த. சண்முகசுந்தரம் 4-1 56-57 1977*

**76 கூத்துத் தமிழ் அன்றும் இன்றும்**

*புத்தனேரி*
*ரா. சுப்பிமணியம் 5-3 49-66 1981*

**76.(அ)சமூக நாடகங்கள்**

*ஆறு. அழகப்பன் 5-3 39-48 1981*

**77 தெருக்கூத்தும் அங்கியோ நாட்டும்**

*மா. நவநீதகிருட்டிணன் 5-3 446-449 1981*

**78. நாட்டுப்புறக்கலையும் சோழ பெரு மன்னர் கால இந்துக் கோயில்களும்**

*செல்லத்துரை*
*குணசிங்கம் 5-3 33-38 1981*

**79 நாட்டுப்புற நாடகங்களில் தெருக்கூத்தின் செல்வாக்கு**

*அறிவு நம்பி 5-3 160-172 1981*

**80 பண்டைய குரவைகூத்தும் மட்டக்களப்பு குலவை போடுதலும்**

*இ. பாலசுந்திரம் 4-1 130-152 1977*

**81 மட்டக்களப்புக் கிராமிய தமிழ்க் கலாச்சாரம்**

